உ

சிவமயம்

ஸ்ரீ கற்பக விநாயகர் முறையீடு.

மயின்மலை முருகன் முறையீடு.

அரியக்குடி ஸ்ரீ நிவாசப்பெருமாள் திருவிழா

வாகனக் கவி.

குன்றக்குடி என்னும்

# மயூரகிரிக் கலம்பகம்.





இவை

அமராவதி புத்தூர்

வயி. நாக. ராம. அ.

## இராமநாதன் செட்டியாரவர்கள்

இயற்றியவை

மதுரை சந்தான விலாசம் பிரஸில் டைட்டில் பேஜ்

பதிப்பிக்கப்பட்டது.

சிவமயம்.

விளம்பி௵ தைமீ 10ந்தேதிக்கு 22-1-1899ல்
நடந்த நகரக்கோயில் பிள்ளையார்பட்டிக் கும்பாபிஷேகத்
திற்கு முதல்நாள் மாலைப்பொழுதில் மிகப்பயங்கரமான
பெருங்காற்றோடு மழை ஆரம்பித்து, பல்லாயிரம்
ஜனங்கட்கு இடர் செய்யவந்ததைத் தடுக்கும் பொருட்டு

# ஸ்ரீ கற்பக விநாயக

## மூர்த்திக்கு முறையிட்டுப்பாடியகவிகள்

திருதங் குடி யென்று வாழ்கின்ற செல்வச் சிறப்பின் மிக்க
மருதங் குடியின் முனைத்திகழுங் கற்பக மாவடிக்கீழ்க்
கருதுங் கருடனு மன்னமும் வெள்ளைக் களிறும் பற்றல்
விருதுங் குயிலப் பெறப்பெருந் தேவர் விழிப்பிப்பரே. (1)

எல்லாச நாட்டிய பூஞ்சோலை விண்ணளவும் கண்ணுறுகின்ற
நல்லாச னாட்டல் மருதங் குடியளர் கற்பகத்தைச்
சொல்லாச நாட்டிய பூமாலை சூட்டிய தொண்டர் வைதும்
இல்லாச னாட்டிவைப்பார் கற்பகத்தை யிமையவரே. (2)

கற்றது நின்புகழன்றி யொன்றில்லைஎங் கற்பகமே
புற்றது நீமருதங்குடி வாழ்க்கை புணர்புகந்து
பெற்றது சம்பாவும் பச்சைக் கொடியுமிப் பெற்றியினாற்
சொற்றது வையக நுங்குடும் பங்குளிர் சோலை யென்றே. (3)

சம்பா வயல்மருதங்குடிக் கற்பகத் தந்தி யெந்தாய்
கும்பாபி டேகஞ்செய் வேஞ்சிறி யேமன்பிற் கொண்டருள்வாய்
வெம்பாபந் தீர்க்குஞ் சடைக்கங்கை யாற்றில் விழுந்து குளிக்
தம்பா துகிலைப் பிழியவைப் பாய்க்கிஃ தரிதன்றே. (4)

தப்பு தலைக்கொண்டுன் கும்பாபி டேகநன் றாட் குறித்துத்
தப்புதல் வர்பெண்டி சோதிகந் தாரைத் தழுமைவிளைத்
தப்பு தலைப்பெய் தலைப்படது கொண்டாற் கடப்பகொன்றே
கப்பு தலைத்தெங்கு மோர்மரு தங்குடிக் கற்பகமே. (12)

செல்லென்று கேட்பி னியாங்கொடுஞ் செம்மனிலுஞ் சிக்கனைக்கெட
அல்லென்று கூற வளப்பில்செல் சூழ்ந்தன யாவைவரை
சொல்லென்று கேட்பது நீயே யெமது துயர்தவிர்ப்பாய்
கல்லென்ற ருவிசொரிமரு தங்குடிக் கற்பகமே. (13)

தாயிடைப் போகின்ற சேயினைப் போன்றுங் குணமடைக்கெக
வெயிலிடைப் போகின்ற வித்தெரி யாமல் மயங்கு கின்றேன்
நீரிடைப் போகின்ற வெண்ணெயொத் தேமுன் சிதறிடத்தெந்
காயிடைப் போ முனக் காயிரம் காத்தருள் கற்பகமே. (14)

முற்றிற்று.

இந்தப் பிரார்த்தனையின் பிரகாரம் மழையுங் காற்றும் உடனே நின்று நிலைந்தோன்றியவர்க்கும் பெருங் களிப்பு உண்டாயிற்று. கும்பாபிஷேக தினத்தன்று ஸ்ரீ கற்பக விநாயகமூர்த்தியைத் தெரிசிக்கச் சூரிய மூர்த்தியும் ஒன்பதாவது பாட்டிற் பிரார்த்தித்தபடி ஆயிரங்கரங்களோடு தோன்றி விளங்கினார்.



உ

சிவமயம்.

# மயின்மலை முருகன் முறையீடு

## காப்பு.

சீர்த்தி முறையீடு நிகழ்த்தச் செங்கைவடி வேற்கரனை
பேர்த்தி முறையீடு மன்கு முற்றவே—யார்த்திவர்
ஞானகய வேழத் தாளமுகக் குன்றைக்
தொண்டைபடி வேழத் துணை.

## நாற்றைப்பது அடி ஆசிரியப்பா.

---

ஒருநாட் சயந்தலைக் காரிருட் பகைவனின்
வாம்மலர் கிற்பன வாய்மலர்ப் பள்ளியிட்
டுகாற் புட்குலஞ் சிறுகாலு தைத்தலிற்
பொலிபவிழ் தளவமென் றவிர்பூக் குடைய
செந்தா தளைஇப் பைந்தேன் றெவிட்டுப
கணக்கறத் தெக்கியும் பிணக்கறுத் தெழிசைப்
பாட்டயர் பயம்புகு கோட்டியர் பாரைத்
தொகாஅங் குயிலினங் காமர வருந்தியென்
றழைப்பன போலவட் பிழைப்பில கூவலிற்
சகாரி ஞாங்கர் நகைப்பொடு கேகய
மெல்லியற் கணிகையர் பல்லியற் சதுர்கொள
வந்தர சாரணைடும் சுந்தரச் சோலைசூழ்
மயின்மலை மேவிய வயின்மலை விலோசனக்
குறக்கொடி கரிப்பிணை வுறத்தழீஇ மகிழ்பெறு
கடம்பணி சாறு தடம்புய தயாபர
னைக்கட் செவிக்கலன் முக்கட் புராதனத்
திரும்பிர னைப்பொருள் தரும்பிர சாரனை
வெண்ணிலா வஞ்சகக் கண்ணிலான் மதலைபார்க்
கந்தகன் பின்வரு மிந்திர குருவாங்

கேறிய தேரியாத் தூறிய வோணையிற்
றாகத படாத்திய மாகதக் குரூஉக்கலின்
யாதவ குலேசதா மோதான் மருக
ஆரணன் றருக்கிய காரணந் தேறிமுற்
பெரிமலாங் கணீரெனக் காமெலாங் கொண்டைத்
குட்டிச் சிறைசெயாச் சிட்டத் தொழிவினை
யியற்றிமற் றதனையும் பயிற்றிய தேசிக
நாயினுங் கடையனே ஞாயினும் பேரருள்
கோடலுக் கல்லனேற் பாடலுக் கொல்லுமோ
ஆதலாற் கெழுமிய காதலாற் சிறியனேன்
முறையிடு பாட்டினை நிறைசெவி யேற்குதி
தந்தைமா தாவிரு முந்தைமாக் குரவரு
பன்முறைக் கலத்தலி னின்புறப் புறப்படுஞ்
சுக்கில சுரோணிதந் தொக்கபோ தாவயின்
வினைவழித் தோன்றிய நினைவழி புலனுனேன்
அஃறிணைப் புகாது பஃறவ மிழைத்தலிற்
பெறற்கரும் பிறப்பினை அறற்கருங் கூந்தற்
கொடுங்கட் கூற்றுறழ் நெடுங்கட் காமரு
கமலநாண் மரைபுரை விமலவாண் முகவெழிற்
கடற் குமிழியை நிகர் படப்பகர் வார்முலைக்
கடுக்கையங் கண்ணியோன் உடுக்கையு மொவ்வா
வெற்றிடைச் சிற்றிடைப் பொற்கொடிப் பேதையர்
பூந்தாட் பணிந்தே மாந்தாட் படுவதற்
காம்பற் போது தேம்பொழிந் தென்ன
மொழிதரு மாற்றக் கழிதரு நெஞ்சக
முணர்ச்சியோர் வெஃகாப் புணர்ச்சியேக் கற்று
வாளா விரகத்து மீளா நரகினின்
வீழ்ந் தழிக் கிற்பதை யாழ்ந்து யூகிப்பிற்
கழுவலுக் கமைந்த முழுமகன் கால்கவர்
சேற்றைப் பூசிய வாற்றைக் கடுப்ப
விம்மையு மம்மையுஞ் செம்மை தபுத்துக்
கந்தரங் கடாவு மிந்திரன் மானப்

புரைசைக் கரிமிசை யரைசரேத் தெடுப்பப்
பவனிபோந் தகன்ற வவனி பொதுவற
நல்லான் றனையொடு பல்லாண் டளித்துக்
கவிகையுங் கொற்றச் சிவிகையுஞ் சுடர்மணி
யப்பிய விண்டொடர் திப்பிய சதனமுஞ்
சதுர்விதப் படையும் புதுமதுப் பிலிற்றுந்
தென்றல் வந்துலவு மன்றலங் காவும்
பொறிக்குவ மிக்கும் வெறிக்குழன் மாதர்ப்
புல்லி விடா தூறங் கல்வி விரித்த
சேக்கையு முதலாப் போக்கறு பெருவளந்
துற்ற கழற்காற் கொற்றவர் கோட்டியும்
ஒன்றுஞ் சிந்தியாப் பொன்றும் பான்மையும்
உடுக்கக் கூறையும் படுக்கப் பாயலு
மின்றி யிரப்பிற் சொன்றியீ கிற்பரோ
அடர்கோற் றூக்கிப் பிடர்பிடித் துந்தி
யின்று செய்வரோ வென்று வுழந்து
கர்சங் கடந்த வச்சந் தலைக்கொளீஇ
நோய்ப்பசி தீயிற் றீய்ப்பத் தேம்பி
வயிறு வெந் தொட்டி யெயிறு காய்ந்து
மிச்சி லருந்துங் கொச்சை மாக்களுந்
துடுச மாற்றலு மஞ்சு பெயலினைய
உத்தமக் கவிபொழி வித்துவக் குழாங்களு
மிறக்கு நீர்மையும் பிறக்கு மேனையபிற
மாக்களும் விலங்கும் வீக்களும் யாவையுங்
கழிதலும் நிரம்ப விழிவழி நாளுங்
கண்டுங் கேட்டும் பண்டை நூற் றேர்ந்தும்
என்பு தோல் போர்த்துப் புன்புலால் பம்பி
ஊற்றிருந் திழிமல நாற்ற மிகுந்து
பட்டதன் பின்னருஞ் சுட்டெரிக் கும்புகை
மூக்கைத் துளைக்குமிவ் வாக்கைப் பிறவிற்
பொள்ளற் குடங்கரிற் பள்ளநீர் வதிந்த
பெற்றியை யெப்பப் பற்றிய வுயிர்மரீஇ

பத்திபாய்ந் தொழுகொளிச் சத்திய மறையிற்
கச்சரையுஞ் சுரிகையுஞ் செச்சையு மிமையா
நோக்கி யுரோம மேக்குப் பொடித்து
நாத்தழும் பேறத் தோத்திரம் பாடிப்
பராநோ தழிஇன் றிரை சமீரணித்து
குழுகலை யொருவிய பாழுமனச் சழக்கனேற்
கிப்பவம் போயபின் பெப்பவ மெய்துமோ
காற்றுள காலையே தூற்றுமா கழறிய
ஆசகன் மேலோர் வாசகப் படியே
நிமயக் கொடோ ஆமயங் கவற்றலின்
அங்கிய மழுங்கிய பொங்கிய பங்கியுந்
திருத்திமா ருதம் பொரு விருத்தி வெய் துயிர்ப்பும்
நீணிறச் சிந்தூவிற் பாணிறப் பிறையிரண்
டொளங்கதிர் வீசலிற் றுளங்கதிர் கோடணை
யுக்கிர வுருவினின் வக்கிர தந்தமுஞ்
சபிரிய முகைக்கும்வெம் பயிரவக் கோலமுந்
தண்டமும் பாசமுங் கொண்டதின் பருஉவலிக்
தென்றிசைக் காதிபன் கொன்றணுந் நிர்ந்துமித்
துத்தம் நொந் துதவிய வித்தகத் தல்வியும்
பாதுகாத் தோம்பிய தாதையுங் கொஞ்சிய
மைந்தரும் கடிமணப் பந்தின் விதியுளிப்
பரிணயம் குயிற்றிய எரியிழைத் தெரிவையும்
இளைஞரும் முதிஞரும் கிளைஞரும் யாவரும்
கட்டியா வலித்துக முட்டிமோ திக்கலுழ்ந்
தேங்கிமா ழாப்பப் பாங்கு சிலரெழீஇ
விலங்கலிர் தொடர்திரோ கலங்கலி னுங்கொலோ
சாதமும் பரிபவ வீதலு மியற்கையே
கொன்னே வருந்தலா னென்னே நெருங்கலுக்
கவத்தினை விளக்குமிச் சவத்தினை மண்ணுபு
அடையிற் புனைந்து பாடையி னேற்றித்
தூக்குதிர் புணியா தூக்குதிர் விரைவினின்
உணணலுக் காயின பண்ணலுக் கென்பதன்

சிவமயம்.

தேவகோட்டை, மகா வித்துவானும், பிரபுகுல திலகருமான

## வீர. லெ. சின்னையா செட்டியாரவர்கள்

## சாத்துகவி.

---

அருத்தியளித்திடும் புத்தூர் இராமநாதக் கவிஞன் அசலம்பெற்ற
ஒருத்தியளித்திடுங் குன்றைவேட் குயர்ந்த கலம்பகமொன் றாற்றி [யென்னைத்
திருத்தியளித்திடும்படி சொற்றனனெட்டுணை மாற்றஞ்செய்தே [னல்லேன்
விருத்தியளித்திடுங்குகனே திருத்தியளித்திடு மென்ன விளம்பித் [தானே.

காதுக்குமிகவினிக்கு மமுதுகுத்த தெனுங்களிக்குக் களிக்கோதத் [தைத்
தூதுக்குவியக்கோவெண் ணுரைவிடு செய்யுட்குத் துதிக்கோவாசப்
போதுக்குமதுவுண்ணப் புகும்வண்டின் றுறைக்கேற்றம் புகல்கோ [னாலின்
மாதுக்குமனமுவக்கும் மதிப்புலவீர் நேருளதேல் வழங்குவீரே.



சிவமயம்.

மயூரகிரி யென்னும்

# குன்றக்குடிக் கலம்பகம்.

## முகவுரை.

---

கலம்பக மென்பது நறுமணங் கமழும் பல மலர்களைக் கலந்து கட்டப்பட்ட கதம்ப மென்னும் பூமாலைபோல, இனிய சொற்கள் நிறையும் பல பாவும் பாவினமுந் தன்னிடத்தே விளங்கப் பாடப் பட்ட ஒரு பாமாலையாகிய பிரபந்தம், இப்பிரபந்தம் கல்வி யறிவு சான்ற பெரியரால் நியமிக்கப்பட்ட தொண்ணூற்றாறு பிரபந்தங் களுளொன்றாம். இது, ஒரு போகு மயங்கிசைக் கொச்சகக்கலிப் பாவும், வெண்பாவும், கலித்துறையுமுதற் கூறப்பட்டுப் புயவகுப்பு முதலிய பதினெட்டு அங்கங்களை யுடையது. கால வேறு பாட்டால் இருபது அங்கங்களையு முடையதாகும். அவற்றின் பெயர்களெல் லாங் கலம்பக நூலுள்ளே வருமிடந்தோறுங் கண்டு கொள்க பூமாலைக்குள் கதம்பம் உயர்ந்தது போலப் பாமாலைகட்கு கலம்பக முயர்ந்ததென்பது மதிநுட்பத்தோடு கற்றாரெல்லாருங்கண்டறிவர்

இவ்வரிய பெரிய பாமாலையைத் தமிழிலக்கிய இலக்கணங்கள் பலவற்றையும் ஆதியோடந்தமாகப் படித்துக்கவித்துவ சத்தியுடை யவரே செய்யவல்லவர், அவரு ளொருவராக மதுரைச் சில்லா இராச சின்னங்கள்பெற்ற நாட்டுக்கோட்டை நகரவணிகர்குலதிலக ராய்த் தொன்று தொட்டுச் சிவநேசச் செல்வமிக்க குடிப்பிறப்பிற் சிறந்து விளங்கிய அமராவதி புத்தூர் வைநாகரம் அ. இராம நாதன் செட்டியாரவர்கள் இதன் முன் னிருபத்தேழு வருடமாக மதுரைச் சிவதேவஸ்த்தான கமிட்டிமெம்பராயிருந்து சிவபுண்ணிய பரிபாலனஞ்செய்து வரும்போது கலியுகவரதராகிய குன்றக்குடி முருகக்கடவுளிடத்தன்பு மேலீட்டால் "செயற் கரிய செய்வார்

பெரியார்" என்ற திருக்குறள் அருமை வாக்கிய மெய்ப்பொருள் விளங்க இந்தப் பிரபந்தத்தைப் பாடி முடித்துத் தமிழ்ப் புலமை நிரம்பிய வித்துவான்கள் பலரிடத்திலுங் காட்டியதுபோல என்னிடத்திலுங் காட்டினார்கள்.

அதை வாங்கி யொவ்வொரு செய்யுளையும் உய்த்துணர்ந்து படிக்குந்தோறும் மோனை எதுகைச் சிறப்பும் சொற்சுவையும் பொருட்சுவையும் திரிபு யமகம் சிலேடைத் திட்ப நுட்பங்களும் எண்ணலங்காரங்களுங் கட்டளையின் கௌரவங்களும் ஒலிக்குறிப்பால் வேறு வேறு விசேட நயங்களும் அன்பினின்பத் துறையமைதியும் பக்திரசப் பெருக்கும் பிறவும் பார்த்துப் பார்த்துப் பரமானந்த முற்றேன். ஆயினும் இவையனைத்தும், இந்நூலாசிரியராகிய செட்டியாரவர்கள் இதன் முற்காலங்களில் ஒவ்வோரமையத்தும் ஒவ்வொரு காரணம் பற்றிப் பாடிய தனிநிலைச்செய்யுள் பலவற்றையும் தொடர்நிலைச் செய்யுள் சிலவற்றையும் அப்போதைப்போது சொல்லக்கேட்டு, எல்லாநயங்களுங் கண்டு உருசித்தறிந்த எனக்கு ஒரு புது விருந்தாகத் தோன்றவில்லை.

இத்தகைய பேறிவிற் பிறங்கிய சீமந்த செல்வந்தராகிய செட்டியாரவர்களுடைய தமிழ்த்திறமையையுங் கவித்துவ சாமர்த்தியத்தையும், திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன மகா சந்நிதானங்களாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் தலயாத்திரையாக மதுரா நகரத்தி லெழுந்தருளி யிருக்கும்போது "கற்றனவோக்கும் புதியன கேட்பன கண்ட மன்னு ளுற்றன வோக்கு மொருபகற் காண்பண" என்ற முதுமொழிச் செயயுட்கிணங்கக் கண்டன்றோ செட்டியாரவர்களுக்குத் தமது ஆதீன வித்வ சிரோமணி யென்னும் பட்டப்பெயரளித்தருளிய அருமை பெருமையை யென்னென் றெழுதுவேன். தேசிக சுவாமிகள் இப்பட்டப்பெயரளித் தருளியதற்கு இன்னுமொரு காரணம் இதனடியிற் குறிக்குஞ் செய்யுளிற் கண்டு கொள்க.

ஓங்கு கயிலையி லந்நாளிரு பொருளு மொருவனிடத் துருமையாலே
யாங்குதன தனையுமாரூரனையுந் தோழமைகொண்டவ் விரண்டுந்(புற்
தாங்குமிவ ணொருவனே சாலுமென்று பட்டமொன்று தரித்துநட்
மீங்குமகிழ்ந்தான் தருமைமா நகர்ச்சுப்பிரமணிய விறைவன்றானே

"இனி தோன்றிற் புகழோடு தோன்றுக" என்னுந் தேவர் திருக்குறள் வாக்கியத்துக் கிலக்கியமாகப் புகழும் புண்ணியமும் பெறுமாறு நம், செட்டியாரவர்கள் பாடிய இக்கலம்பகமாலையாகிய பிரபந்தத்தைத் தமிழறிஞ ரனைவரும் வாங்கிப் படித்துக் குன்று தோறாடல் செய் குமாரக்கடவுள் என்று நேர்வந் தருளின்பமே மெய்தி நின்று நீடூழி மன்ற வாழியவே சுபம். சுபம். சுபம்.

இங்ஙனம்,

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,

**மு. ரா. அருணாசலக் கவிராயர்,**

திருப்பரங்குன்றம்.





உ

சிவமயம்.

(४५५०)

# மயூரகிரிக் கலம்பகம்.



## தோகையடி விநாயகர் காப்பு.

திருமாது வாழ்க்கை நிலைக்கின்ற குன்றையிற் றேங்கடமாத்
தருமாது வள்ளி தழுவுங் கடம்பன்பொற் றாட்கெளியேன்
பெருமாது கொண்டு கலம்பகஞ் சூட்டிடப் பேசுபலம்
வருமா துளைகெழு கைத்தோகை யத்தி வழங்குறுமே. (1)

## சரஸ்வதி துதி.

மாரதியை மலைவாரு மண்மாதனை மலைவாரு மருவியாடுங்
காரதியை தடம்புடைசூழ் தெங்கிரவி புரவியைப்போய்க் கதுமென்றோட்டிச்
சாரதியை யிளநீரின் மகிழ்செய்குன்றைக் கலம்பகவார் சலதிநீந்தப்
பாரதியை மானசவா வியுட்பற்றப் பெற்றேற்கும் பயமுண்டாமோ.

## இலக்குமி துதி.

மைத்துருமஞ் சார்பொழில்விண் புகுந்திருட்டிக் குளிர்நடுக்க
வானோர் மாழ்கி
யித்துருமம் புதுமைசெயு மைந்தருவிற் சேர்ந்தன்றன்
றென்று தேற
வைத்துருமம் வேண்டுகுன்றைக் கலம்பகஞ்சொல் லின்செல்வம்
வாய்ப்ப வாரி
வித்துருமப் பொற்கொடியை யகம்படர வைத்தேற்கு
மிடியுண் டாமோ. (3)

---

(அரும்பதவுரை) (1) மாது-ஆசை. கெழு-பொருந்திய. (2) மலைவார்-ஒப்பார்.
(3) சேர்ந்தன்று சேர்ந்தது. உருமம்-வெப்பம்.

## பார்வதி துதி.

முனிவரையு மொருமொழியின் மயக்குகொடிச் சியரிற்சீ
மூத மேவும்
மினிவரையும் வேறலெனி தோவொளியி னெனவொளியும்
விதங்காட் டுஞ்சீ
ருனிவரையும் புகழ்க்குன்றைக் கலம்பகத்தின் றமிழினிமை
யோவா தோங்கப்
பனிவரையின் வழிபசுந்தே னுண்டேனென் பாடலுக்கும்
பழிப்புண் டாமோ. (4)

## நூல்.

### மயங்கிசைக் கோச்சகக்கலிப்பா.

வானேறுங் கற்பகப்பேர் வண்டலையுந் தண்டலையுந்
தேனேறும் பங்கயச்செந் திருநாடுந் திருநாடும
இமையாத பெருஞ்சிறப்பி னிணைக்கண் ணுங் கணைக்கண் ணு
மமையாத திறமடைத்த வரம்பையரு நரம்பையருஞ்
சுவையமுத சுரபிமுலை துணையும்விரல் தடவிவழி
யிசையமுத மலதிலெனு மிசைப்பாட டு மிசைப்பாட்டு
மோராறு வளநளினத் துறுவதன தடத்திருமின்
போராறு விழிகாதல் மொழியாறு கலரயலைப்பக்
குடியேறி மயிலேறிக் குலவுதிருக் கோலமதைப்
படியேறித் தொழும்யாரும் பலகாலு மெதிர்காணூஉ
எண்ணளவு மதியாதே யிழிதகிழியும் பெருந்தகைய
விண்ணளவு மயூரகிரி விமானத்தின் மிசைப்பொலிவோய்.

இது, பன்னிரண்டடித்தரவு.

மணிமுகந்தாங் கியசலதி வடிவினந்தோ கையைவிரிக்கும்
பிணிமுகந்தாங் கியசீதான் பிணிதவிர்ப்ப ததிசயமோ

(4) இல்-வீட்டினிடத்து. இவரை-இக்கொடிச்சியரை. (1) திருநாடு-சிறந்த தேவநாடு. கணைக்கண்ணும-பாணத்தினிடத்தும. தடவி-தடவப்பட்டு, வழியிசைப்பாட்டென முடிக்க. இசைப்பாட்டு - வீணையினோசைப்பாட்டு, விழி மொழி காதலாகிய ஆறுஎன மாறறிப பொருள்கொள்க. எண-எள. வடிவின-உருவத்தைப்போல. பிணிமுகம்-மயில்.

கோலவினையைத் தனியாளுங் குலக்கொடியா ளுவப்பதற்கோ
புலவினையைத் தொலைத்தொளிரும் போர்வேலைப் பரித்தனையே
மூவுலகுந் தொழுவிசும்பு முழுதாளி மகண்மகிழ
மாவுலகம் புகழ்ச்சிசெயும் வச்சிரங்கை நச்சினையோ
எறியுமல ரவனுடல மெரியும்விழி களிப்பதற்கோ
செறியுமயிர்த் தகரேறித் திக்கெல்லாந் திரிந்தனையே
கொஞ்சுதலை விடுத்திறைவன் குடிலைகொளச் செயுமுறைக்கோ
அஞ்சுதலைக் குயர்வாக ஆறுதலை யாயினையே
சிந்திக்குந் தகைமிகவுஞ் சிறந்தென்று மிளையாய்நீ
வந்திக்குந் திறல்வீர வாகுவென்னை யுயிர்த்துணையே.

இவை ஆறு மீரடித்தாழிசைகள்.

கணமழை பொழிதரு கருமுகின் மிசைவர
வணமிகு வெருகட மறைபயின் மயிலினை
திதிபெறு சுதருறு திறமுயிர் பருகிய
அதிகொடு விடவடி வமைதரு மயிலினை

இவை நாற்சீரோரடி கொண்ட அம்போதரங்கம்.

மரகத துரக மிசைந்தனை வரைமது வமுத மிசைந்தனை
பரமத திமிர மறைந்தனை பரமகு டிலையு மறைந்தனை

இவை முச்சீரோரடி கொண்ட அம்போதரங்கம்.

சூரறுத்தனை போர்வெறுத்தனை
தோம்விடுத்தனை நேமடுத்தனை
பார்பொறுத்தனை நீரொறுத்தனை
பாரிடத்தினை யோரிடத்தினை

இவை, யிருசீரோரடியம்போதரங்கம்.

காவோதண் ணிழன்மலியுங் கடிபொழிலிற் செடியோபூம்
பூவோவப் புதுமலரிற் புகுசுகுண மணமேயோ
தடமோமிக் குளசலனத் தடந்திரையோ தண்ணீரி

---

(1) புலவினை-இழிந்தவினை. எரியும்-எரிக்கும், பிறவினைப்பொருள். குடிலை-பிரணவம். இளையாய்-இளைக்கமாட்டாய். திறமுயிர்-திறமும் உயிரும். வரைமது-உமாதேவி, அமுதம்-பால். நீர்-கடல்,

னிடமோவப் புனலகலா திருக்கின்ற குளிரேயோ
பாசமோ டார்க்கும் படமோ நுண் ணூலோகாரப்
பாசமோ யாதோ பகர்நீ பரம்பொருளே.

இவை, பெயர்த்தாழிசைகள்.

எனவாங்கு
குவிகட லாடைப் புவிகரு வுயிர்த்துக்
கண்ணன் பின்வரும் வண்ணவான் குடுமி
யிமையம் பயந்த வமையந் தோளி
முலைப்பா லுண்டு கலைப்பா விண்ட
சுந்தர ஞானசம் பந்த வாரிய
வழியு முலவா வாழி நெடும்புகழ்
குன்று மயூரக் குன்றைறவந் தணைவார்
வேண்டிய வாங்கே தூண்டிய வள்ளற்
றன்மை கேட்டுநிற் சார்ந்தனன்
புன்மை போக்கிமன் னன்மைகாட் டுதியே. (1)

இது, பத்தடி நேரிசை யாசிரியச் சுரிதகம்.

துதி வெண்பா.

காட்டிற் புனங்காக்குங் கன்னிமட மான்குருளைக்
காட்டிற் புலிவேங்கை யாயினையென்—கோட்டிற்றேறன்
றத்திவரச் செய்வாய்ப் பாய் தன்குன்றை கண்டாராம்
பத்திவரச் செய்வாய் பகர். (2)

கிள்ளைவிடு தூது.

அஃதாவது, பொருள்வயிற் பிரிந்த தலைவனுக்குத் தலைவி
கிளியைத் தூதாக அனுப்புதல்.

கட்டளைக்கலித்துறை.

பகலும் பரவு மிரவாக்குங் குன்றையெம் பைம்பொழிற்கட்
புகலுங் களிமொழிப் பூங்கிளி காளந்திற் போயுரையீ
ரகலும் பெருவெறுக் கைக்காசை வைத்தணை யாதுநின்றார்க்
கிகலுங் குணத்தழு துங்கைத் துளாளிவ ளென்பதுவே. (3)

---

(1) எனவாங்கு-இது தனிச்சொல். (2) குருளைக்கு-குருளைக்காக. ஆட்டில்-விளையாட்டினிடத்து. வர - வருதலால். (3) அகலும்-விரியும். வெறுக்கைக்கு-திரவியத்துக்காக. இகலுங்குணத்து-விரோதிக்குங்குணத்தோடு.

இதுவுமது.

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வேதரூபம் பெறுமறு மாமுக வித்தகன்
    குன்றைத் தக்கைக ணிவிரெஞ்
சாதரூபம் பெறுநுஞ் சிறைக்குறுந் தலைவ
    ஞர்க்குறச் சாற்றுதல் வேண்டுமெம்
மாதரூபம் பெறுவது திண்ணமே மான
    மின்று வலைகலை போயின்று
சாதரூபம் பெறுசை சவத்துள தகைய
    ளாயின டாழ்க்குறி னென்றரோ. (4)

துதி வெண்பா.

என்றே யருள்வைமதி யில்லேற் குயர்குன்றைக்
குன்றே விழைந்துவிளங் குஞ்சேயே—நன்றேமால்
புல்லுமிறை புந்திமகிழ் பொன்னே வெளியேசூர்க்
கொல்லு மசனியே கூறு. (5)

தலைவன் பவனிகண்டு வருந்திய தலைவியைத் தலைவன்
சேர்வானென்று பாங்கி கூறுதல்.

பதின்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

கூறுசங் கணிந்த கொண்ட றேடுசங் கரன்ப யந்த
    கோகிலந் தழங்கு குன்றை முருகேச
ரேறுதிண் டிறந்து லங்க வேலைநின் றெழுந்து சிங்க
    வேறெதிர்ந்த தென்று கந்து மயின்மீதே
யாறிரண்டு திண்பு யங்க ளோடுவந்த வென்றி கண்டி
    வாகுலந்த ழைந்த கொம்பை யணைவாரோ
வீறுசுந்த ரந்தி ரிந்து தேறுசிந்தை யும்பி றழ்ந்து
    மேவுசங்க டந்தொ லைந்து விடுமாறே. (6)

---

(4) சாதரூபம் - பிறந்தகோலம். சைசவம் - சிசுத்தன்மை. எஞ்சாத-குறையாத. நுஞ்சிறை-கிளிச்சிறை, அது ஒருவகைப் பொன். (5) மால்-மோகினி வடிவாகிய திருமால். (6) இதில், வேலை மயிலுக்கும் சிங்கவேறு முருகேசருக்கும் உவமையாதல் கண்டுகொள்க. வேலை = கடல்.

பாட்டுடைத் தலைவன் புயங்களின் செயல் கூறுதல்.

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஆறு பொங்கிஅய லோடு கின்றஅரு ளாழி தந்தநெடு
வேல்வைத் திருந்தன
ஆசு கந்தனுசு வாள்கொ டும்பரிசை யாழி யுந்தியெறி
பாசத் திசைந்தன
ஆத பஞ்செய்சத கோடி யங்குசமொ டாக வஞ்செய்படை
மேவிப் பொலிந்தன
ஆகு லந்தவிர வார ணங்குமுறி யாடு கின்றகொடி
யேறிக் கிளர்ந்தன

தூறு புன்பயமி லீர்வ ரம்பெறுவிர் சூழ்தி றன்றகுறி
காணப் பொலிந்தன
சோம கண்டநுதல் வேட மங்கையரி சூழ்சி லம்பணிசெய்
பாதத் திறைஞ்சின
தோகை வெம்புரவி வாய்கி டந்துலவு சோர்வு விண்டகடி
வாளத் திசைந்தன
தோத கம்பரவு மாய விஞ்சைமிகு சூரி ரண்டுபட
வேல்விட் டெறிந்தன

பாறு தைந்தமொழி யானை நங்கைசம பாகம் விஞ்சுமுலை
மேலுற் றுறைந்தன
பாத லஞ்செறியும் நாகர் துங்கமணி பாவு திண்கடக
மேறிச் சிறந்தன
பாத கங்கெழும லோடு நிந்தைபடு பாவி யென்கவிய
வாவிப் புனைந்தன
பாவ முஞ்சுரமு மோட எந்தைபுகழ் பாடி வென்றுதிரு
நீறிட் டணிந்தன

மாறு மிந்த்ரனர சாள வந்தவுயர் வாழ்வு தந்ததவ
வூழிற் கிளர்ந்தன
மாத வன்கமல நாபி வந்தமறை வாணி யன்றலையை
மோதித் துலங்கின

வார விந்துளவி சால மன்றன்மலர் மாலை துன்றியழு
கூறிச் செறிந்தன
வாழை பைங்கமுக மோவெ னும்படி விண் வாவு குன்றைப்பிறை
வீரப் புயங்களே. (7)

## களி

அஃதாவது, கட்குடியன் கள்ளின் பெருமையைச்
சிலேடைவகையாற் கூறுதல்.

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

கள்ளாருங் கடம்பணியுங் குன்றைநகர்க் குடியன்
கட்கடையை விட்டகலாக் களியமியாம் புனவி
னள்ளாரு நெடுந்தாலப் பால்சுமந்த பொறையா
னுகர்குலத் திறையறிவிற் சான்முனு யுற்று
னெள்ளாரு மறுமார்பன் மதுவனுவுண் டன்றோ
வோங்குபுரு டோத்தமனென் றுலகுதொழ லானுன்
புள்ளாரும் பிரமனம்ம களைநாவில் வைத்தே
போதனு யினனினிநாம் புகலினகை வருமே. (8)

இதுவுமது.

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நகைவரு மென்னிற் புகைவரு மிறைபின்
னல்கினேன் வதிமயின் மலைக்கீக்
குகைவருங் குன்றக் குடியெனும் பெயர்யாங்
கூடலாற் பெறும்பெருங் குடியேம்
தகைவருந் தேற லுற்றவ ரருமா
தவங்கள்கா ணுதவர் மதுரைத்
திகைவரும் பெருமை பிலாதவ ரெல்லாஞ்
செகத்தினுக் கென்பயன் இருந்தே. (9)

---

(8) கட்கடை-கள்ளுக்கடை, கடைக்கண். தாலப்பால்-பனம்பால், பூமி யின் பகுப்பு. மதுவனு-அனுவள்வுகள், மதுவென்னு மசுரனுயிர். நம்மகளே-நம்முடையகள்ளே. அம்மகளை - அழகிய சரச்வதியை. (9) தேறல்-கள் தெளிவு. மாதவம்-கள்-பெரியதவம். மதுரை-மதுரை-கள்.

## இரவுநீடத் தலைவிவாடல்.

அஃதாவது, தலைவனைப் பிரிந்த தலைவி இராப்பொழுது நீடித்துத் தோன்றுதலால் வருந்திக் கூறல்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இருந்துவசம் பிறிதொன்று மின்றியெழிற் பன்னிருதோட்
கேங்கி யோங்கிப்
பெருந்துவசம் பீரமெனப் பிறங்குதனங் கனந்தினமும்
பெயர்ந்து சோர்ந்து
வருந்துவசந் தனைச்சாரன் மாயூரா சலற்சேர்க்க
மதியீ ரன்றே
னருந்துவச மொலியாமை யாற்றியதை மாற்றுதிரா
வறவுந் தேர்ந்தே. (10)

## துதி.

நாற்பத்துநான்கு அடியகவற்பா.

தேக்கடர் சாரலின் மாக்கனி தேறலைக்
கடுநடைக் கூரெயிற் றடுதிறற் கடுவன்
கொல்லைச் சவரி லொல்லைப் புகாஅ
வைவனம் பொதிந்த மைவனக் குடங்கவிழ்த்
தெடுத்தது நிறைய மடுத்துச் செடித்தலைக்
கொழுந்துணர்ச் சுமையடை யழுந்துற விருத்திக்
காதன் மந்திபாற் போதன் மரீஇமுனர்
வைத்துச் சுவைத்தியி துத்தம நறுவெண்
ணெடும்பொழு தேயாக் கொடுந்தழற் காம
வெம்பசிக் கிடந்து பம்பனு ருழந்தேற்
கெத்தனை மதுக்குட முய்த்தனை யேனும்
விரும்பலன் புணர்ச்சிப் பெரும்பலன் வெஃகிக்
கலவிப் புதுத்தேன் குலவி யொருங்கே
யுண்டிடூஉ மாப்புக் கண்டன மாக
விப்பகல் கழித்துமென் றெப்பகல் பூம்பொழிற்

(10) துவ-இரண்டு. (11) சவரில்-வேடர்வீடு.

சென்றனை வளஞ்சால் குன்றையம் பொருப்பிற்
காற்றுப் படர்ந்தவர் நாற்றத் தொழுநோய்
முன்னுச் சொலற்குநாத் துன்னுப் பல்பிணித்
தொடாநெறிக் கடல்கட் படாதுறுகனம் வறப்பத்
தண்ணவா மருள்பொழி வண்ணவான் செம்மைக்
கொண்மூக் கேண்மதி யெண்முழு வுலகு
மிடனனி பரப்பிய சுடர்மணித் திண்டோ
ளிந்திரன் புதல்வியை மந்திர முறையின்
வேட்டனை நாமக் கோட்டுயின் மீண்டு
நன்றுசிறி துரியாக் கொன்றுழல் வாழ்க்கை
மறநாய் குரைப்பருந் திறனார் முன்றிற்
றுஞ்சுங் காலையும் வெஞ்சின மருஉப்
பாடமூர்த் துயர்பெறு கோடவாய்ச் சிலைக்
களவுகொள வெழுந்த வளமி லாற்றற்
கடங்களிற் றரித்தனை மடங்கலே றன்னனைப்
புகழ்ந்தடங் காது மகிழ்ந்துபா டுதலே
மன்னிய வயர்தாள் முன்னிய விருப்பும்
சுட்டன் பில்லார் மாட்டு வெறுப்பு
மறன்வாய்க் கால்செலுந் திறனீ மறிஞர்க்
காறுந் தோற்றலா நாணுஞ் செறுந
ரின்னு செய்யி னுன்னு மடமுங்
கழிப்பின்முற் படுத்த பழிப்பி னச்சமுஞ்
சிவமத மலாமற் றவமதப் பயிர்ப்பு
மேகனென் றுணையுணர் சேகுறு தேர்ச்சியு
நிற்றெழும் பேற்றின் முற்றிறு மாப்புஞ்
செயிரினல் லாற்றிற் றைரியப் பெருக்கு
மெழுந்தா ரூவா வழுத்துமா களிப்பும்
யாண்டும் பொருளா வெளியேன்
வேண்டின னடிகளி னீண்டார் தரற்கே. (11)

(11) நீர்-குணம். அடிகளின்-சுவாமிகளைப்போல.

## துதி.

நேரிசை வெண்பா.

ஆரும் பணியு மறுகுஞ் செறியுமுடி
யாரும் பணியு மறுமுகனை—காருமில்லின்
முன்பெருமை யேறுமொன்றி மோதுகுன்றை யெம்பெருமா
னுன்பெருமை மற்றார்க் குறும். (12)

## குறம்.

அஃதாவது, குறத்தி குறிசொல்லுதல்.

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

உறத்தி யானிக்கும் வேலைக் குவந்தவே
ளுவந்த குன்றையைச் சேதனங் கொண்டுவாழ்
குறத்தி யானிச்சு மாமொழி மாதராய்
குமுத வாய்மலர்ச் சோர்மதி கூறெனத்
திறத்தி யானிக் குலந்திங்கள் செப்புமித்
திறத்தி னுன்மிது னந்தெரிந் தேனியற்
றறத்தி யானிக் குறியின் மகப்பெற
லாதி மாதமின் றுதிடத் தாயினே. (13)

## கார்கால வருத்தம்.

அஃதாவது, தலைவனைப் பிரிந்த தலைவி கார்காலம் வரக்கண்டு வருந்துவதைப் பாங்கி கூறுதல்.

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஆயர்திங் குழலுமீங் கழலுமிழும் படிவந்
தனியமொளிர் செவிவெதுப்பத் தீங்குழலுங் காலஞ்
சேயவள வாரியா லங்குடித்து மந்தா
திரண்டுமுகில் வாரியா லம்பிலிற்றுங் காலம்
பாயகொடு விடவரவு மடவரல்வா னல்குல்
படுமெனிலிற் படமடங்கிச் சிறைகிடக்குங் காலந்
தாயபுகழ் மயின்மலையின் முருகனடி வேலிற்
றடித்தொளிர மேலிர்தெய்வமின் சலிக்கின்ற காலம். (14)

---

(12) காரும்-மேகமும். (13) திறத்தி-வாய்திறந்து சொன்னாய். மிதுனம்-மிதுனராசி, சேர்க்கை. அறத்தி-அறத்தையுடையாய். ஆனிக்குறியில்-கெடுதற்குறியில்லாத. (14) வாரிஆலம் - கடல்நீர். வாரி-அள்ளி. ஆலம்-விடம். அல்குல்-அல்குலாள். வேலின்-வேலைப்போல். தடித்து-மின்னல்,

## தலைவன் றன்னிலை சாற்றல்.

தலைவிக்குத் தலைவ னன்பின் வலிமையைக் கூறல்,

கலி விருத்தம்.

காலன் வீழக் கறுத்துச் சிவந்தபூங்
கால னாரியன் காரியல் குன்றைநீர்
காலல் மாறுதல் கண்டனை யாயினோர்
காலன் பின்மைபெற் காணுவை பூவையே. (15)

## நற்றாய் வருந்தல்.

அஃதாவது, மயங்கு மகளை நோக்கித் தாய் வருந்தல்.

கட்டளைக்கலித்துறை.

பூம்பா டலமலை ருங்குன்றை வாணன் புகழறி
யோம்பா டலமெனி னும்மருள் வேள்வனப் புள்ளமுந்தி
யேயபா டலமுற லானுள் வளர்த்த இளங்கிளியு
மோம்பா டலங்கிடை யாக்கிடந் தாளென் னொருமகளே. (16)

## நெஞ்சறிவுறுத்தல்.

அஃதாவது, தலைவன் றன் றுன்பத்தை மனத்துக்குச் சொல்லுதல்.

சந்தக்கலிவிருத்தம்.

மகவான்விதி வதிசீர்மயின் மலைசாருதி மனனே
தகவான்முது கிளிமேலவரு தாபாகயி லையின்மே
னகவான்முது மகமேருநன் னகமேறிய தகைசால்
பகவான்மக னருள்வானிரு பதமோரிறை யினிமேல். (17)

## மறம்.

அஃதாவது, மறவர்குலத் தலைவிக்குத் தலைவன் விடுத்த தூதனைத் தோழி மறுத்துக் கூறுதல்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இறையொருபத் திரமுய்த்தா னெங்கள்குலக் கொடியினைவேட்
டென்றாய் குன்றை
நிறைபலபத் திரமறவர் கண்காணி னின்வாணா
ளொடிதே போலும்

---

(15) ஆரியன்-குரு. நீர்காலல்-நீர்கக்குதல், அஃதாவது, மழை பெய்யுங் கார்காலம். எற்காணுவை - என்னிடத்துக் காண்பாய். (16) ஏம் - ஏமம் ஏம் என்றாயிற்று. (17) ஆன்-இடபவாகனம். தாம்-தகுதி. வான்-பெரிய. (18) பத்திரம்-ஓலை. பத்திரம்-பாணம்.

பொறைமுடங்க லொடுங்கடிது போதியிடை யூறொருவிப்
போயூர் சேரி
னறைகதுங்க டலைமகனிவ் வணங்கையது கொடுபூசை
யாற்ற மன்னே. (18)

## சுரம்போயினாட்கு வருந்தல்.

அஃதாவது, தலைவனுடன் பாலைநிலத்திற் சென்ற மகளை நினைத்து நற்றாய் வருந்திக் கூறுதல்.

கட்டளைக்கலித்துறை.

மன்னுஞ் சிகண்டியன் காலியைப் பாலிக்கு மான்மருகன்
பன்னும் பரிதி கதிர்காமங் கூறப் பரித்தவைவேன்
மின்னுங் கரன்குன்றை வேளையுன் னாதவர் வெம்முளம்போன்
றென்னுஞ் சுரத்திற்கு முற்றாக் கனிசெல வெவ்வண்ணமே. ()

## தென்றலைப் பழித்தல்.

அஃதாவது, தென்றற்காற்றால் தலைவி துன்புறுவதைக்கண்டு தோழி அக்காற்றை நிந்தித்தல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

வண்ணம் பராவு மாறுநமை வருத்துஞ் சிறுகா றனிவிழிக்குங்
கண்ணம் பராவு கைக்குமுதற் கடவு ளருளுங் காங்கேயன்
விண்ணம் பராவு குன்றைமலை யிருப்பான் மயிலுய்த் திருப்பானைற்
றிண்ணம் பராவு சிறைப்பெருங்காற் றினுக்காற் றுங்கொல் திக்குண்டே.(20)

## கார்கண்டு வருந்தல்.

அஃதாவது, கார்காலம் வரக்கண்டு வருந்துந் துன்பத்தைச் சகியாமல் தோழி தலைவனுக் கறிவித்தல்.

கோச்சகக்கலிப்பா.

குண்டலம்வாள் கொடுவெட்டுங் கொடுமையின்மின் னற்கொடிகள்
குண்டலம்வாள் வீசுமொரு கொடியையறத் தெறலாமோ
வண்டலர்ந்தா ளாலளந்த மால்போற்கார் கண்டுளைந்து
வண்டலர்ந்தாள் வாராயோ மாறில்குன்றை மகூறப்பொதிவே. (21)

---

(18) முடங்கல்-ஓலை. அது-அவ்வோலையாகிய பத்திரம். (19) காலி-பசுக்கூட்டம். போன்ம்-போலும். முற்றா-இளமைமுதிராத. (20) வண்-(மன்மதன்) வழங்கும். அம்பு-பாணம். அராவும்-அறுக்கும், சிறுகால்-தென்றல். பராவு-துதிக்கின்ற. (21) குண்டலம்-ஆகாயம்,

துதி.

பொதிய முனிகல்விப் போதஞ்சந் தேகம்
பொதியமுனி குன்றைப் பொருளே—யதிவனப்பைக்
கன்னலஞ்சா பத்தைத்தவைத்தோன் காமுறுவோய் காத்தருடுஞ்
சின்னலஞ்சா பத்தைய கற்றி. (22)

## இரவு நீட்டிக்க வருந்திய தலைவி தலைவனை நினைந்து கூறுதல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

இனியாத வன்மொழியொன் றென்றுமியம் பலன்புரைசா
திருடா னென்னே
துனியாத வன்றனக்குச் சங்குரைகற் றேறென்று
சொல்லி னேயோ
வுனியாத வன்பூசித் துயர்மரவு பெறுங்குன்றை
யுகந்த கந்த
வினியாத வன்மமுள தேறியசெல் வாக்கிருப்பி
னெதுசெய் யாயே. (23)

## தலைவி வருத்தந் தணியாத தலைவனைப் பாங்கி நோதல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

செய்யார் குன்றைப் பதிவதியெஞ் செல்வி யுய்ய நெடுநாளா
வையார் வடிவே லுணவின்றி வாளா விருந்து வருந்துறவு
மையா ருடலம் வெந்தவனே மறித்துங் கோறல் வழக்கிலென்றோ
செய்யார் மூந்நீர் மாவையுளந் தெளிந்து பிளந்த சீரியனே. (24)

---

(22) முனி - நீக்குகின்ற; இது-தாற்பரியப்பொருள். துஞ்சின்னல்-இறக்குந் துன்பத்தையுடைய. அஞ்சு-அஞ்சாவது. (23) வன்-வலிய. துனி-நெருங்கி. யாதவன்-கண்ணன். யாது-எது. அவன்மம்-அந்தவன்மம். (24) கோறல்-செய்யா னெனக்கூட்டுக. மாவை-மாமரமாகிய சூரனை.

## அம்மானை.

அஃதாவது, பாட்டுடைத் தலைவனைப்பாடும் ஓர் விளையாட்டுப் பாட்டு,

அடிமடக்குக் கலித்தாழிசை.

சீர்க்குமர னின்றகுன்றைச் சேர்ந்தன்வள்ளி காந்தனுக்குண்
டார்க்கும் வளஞ்சுரக்கு மாறுமுக மம்மானை
ஆர்க்கும் வளஞ்சுரக்கு மாறுமுக மாமாயி
னார்க்கும்பா ராவார மாருமோ வம்மானை
யன்பர்ப்பா ராவார மாருமே யம்மானை. (25)

மடக்கு.

மான்மருட்சியு மிந்துளமாலையே
வள்ளிகாந்தற்கு மிந்துளமாலையே
தானடத்தலுங் கந்துகத்தோகையே
தமியள்காய்ந்ததுங் கந்துகத்தோகையே
வான்வழுத்தலு மாறுவதனமே
மங்கைக்குஞ்சுக மாறுவதனமே
மானுவப்பு மையூரச்சிலம்பையே
மதனனுய்ப்பு மையூரச்சிலம்பையே. (26)

## தெளிவு.

அஃதாவது, தனியிடத்துக்கண்ட தலைவியைத் தலைவன் பூலோகத்துப் பெண்ணெனத் தெளிதல்.

மருட்பா.

சிலம்பார்க்கும் பூப்படியுந் தேங்குழல்கான் பார்க்கி
னிலம்பார்க்குங் கண்ணிமைக்கு நேர்ந்தே—கலந்தார்க்கு
நன்னெறிய புரியுங் குன்றையங் கிரியில்
நேர்ந்திவ ணின்றவிந் நிலைமை
யீர்ந்தண் கடற்புவி சார்ந்தபூ மகளே. (27)

---

(25) பாரா-பார்த்து. (26) மான்-மான்போன்ற தலைவி. இந்து-சந்திரன். இந்துளம்-கடம்பு. தான்-முருகனாகிய தான். கந்துகத்தோகை-குதிரையாகிய மயில். தமியள்-தனியளாகிய தலைவி. கந்துகத்தோகை-பந்து விளையாட்டின் மகிழ்ச்சி. வான்-வானவர். ஆறுவதனம்-முருகனுடைய ஆறுமுகம். மான்-தலைவி. மை-மயக்கம். சிலம்பு-சிலபாணம். (27) பூ-பூமி.

## கழிக்கரைப்புலம்பல்.

அஃதாவது, தலைவனைப்பிரிந்த தலைவி நெய்தல் நிலப்பொருள்களோடு தன்னுள் கொடுமை கூறி வருந்துதல்.

பன்னிரண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சார்பைந் திரையுந் துவர்வனமே
தழைத்து நிறையுந் துவர்வனமே
தரியே னுடல மரக்கலமே
தாழ்க்கா தோடு மரக்கலமே

பார்வந் தலறும் வெண்ணத்தே
பதியன் புளரோ வெண்ணத்தே
பாவிக் கழிமோ துஞ்சுறவே
பாவி மகட்கே துஞ்சுறவே

மேர்செய் பிணர்கள் வைகுறவே
வெளியேற் றிலையா வசைசுறையே
யெழில்கொள் பலத்த முண்டகமே
யிடைந்தேன் றுயர முண்டகமே

கூர்வாய் நெடிய மஞ்சுகமே
கொடியேற் கிறையா மஞ்சுகமே
குளிர்புன் னாகத் தடங்காவே
குன்றைப் பிரான்றீ தடங்காவே. (28)

## தலைவி மயிலை வேண்டுதல்.

அஃதாவது, பாட்டுடைத் தலைவன் பவனியைக்கண்டு வருந்திய தலைவி அவன் வாகன மாகிய மயிலை நோக்கிக் கூறுதல்.

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

காவி துறுங்குயி லைய நெடுங்கிரி
காவல் செயும்பதி தாழ்வோனை
வேவ விளந்தளிர் மீது கொடுந்தழல்
வீழ்த்த லெனும்படி யேவாதே

---

(28) அரக்கு அலம்-அழுந்துகின்ற துன்பம். மஞ்சுகம்-கொக்கு. (29) பதி-சிவபிரான். தாழ்வோனை-வணங்கப்படுங் குமாரக்கடவுளை.

பாவ முறுஞ்சசி காயு நெடுங்கதிர்
பாய விடுந்திற மேமதேயோ
வேவ மறும்பொழி லேழ்புகழ் குன்றைபி
லேயக வுஞ்சிகி தாராயே. (29)

## தலைவனைப் பிரிந்து வருந்திய தலைவியைத் தோழி தேற்றல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தானே தனக்குத் தனியுவமைத் தரணி பரவு மருணகிரி
தேனே யனைய புகழ்ப்பாட்டன் சென்னி துன்னித் திகழப்ப
னானே யுய்ய நமருய்ய நல்கு சிறிய மகன்குன்றை
மானே பயங்கிச் சிறிதுமுளம் வருந்தல் வரும்பே ரன்புக்கே. (30)

## சந்திரனைக் கண்டு விரகமிக்க தலைவி பலவாறு புலம்பல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.
மடக்கு.

கேளார் தூற்று மதுமலரே கிழ்வார்க் கூற்று மதுமலரே
வேளா ரெளியேன் படுகிடையே விழையா ரிலஞ்சி படுகிடையே
யாளார் செந்தே னூற்றாரே யந்தோ வந்தே னூற்றாரே
நீளார் சிகண்டிப் பதியாரே நிலவைச் சண்டிப் பதியாரே. (31)

## துதி.

இருசீரடி வஞ்சிவிருத்தம்.

பதியார் குன்றையம்
பதியார் சென்றுதம்
பதியார் பண்டியிற்
பதியார் மங்கவே. (32)

---

(29) ஏவம்-குற்றம். வருந்தல்-வருந்தாதே. (30) இப்பாட்டில்-பாட்டன், அப்பன், மகன், பேரன் என்னும் முறைப்பெயர்கள் முறையே வந்தன வியக்கத்தக்கவை. (31) வேளார்-விரும்பார். தேனூறு-குன்றைநதி. ஏன்-எதற்காக. ஆற்றார்-ஆற்றமாட்டார். (32) பதி-இறைவன், முருகக்கடவுள். தம்பதியார்-மணமகன் மணமகள்; இவர் தகப்பன் தாயர். பண்டியில்-வயிற்றில்.

## காமமயக்கத்தால் தலைவி வருந்தல்.

### முச்சீரடி வஞ்சிவிருத்தம்.

மங்க ளஞ்செய் மயின்மலை
யிங்க ளங்கை யிருட்குழாங்
திங்க ளம்பணி சென்னியான்
வெங்க ளம்பெய் விடங்கொலோ. (33)

### சிலேடை வெண்பா.

ஓலஞ் செய்கடலை யொக்குமறு கும்மதனுங்
கோலஞ் செறியுமுபர் குன்றையே—மாலசுரர்
கூற்றுப் படையான் குணக்கீரன் சொன்ன மரு
காற்றுப் படையா னகம். (34)

## இடைச்சியார்.

பால்விற்கும் இடைக்குலப்பெண்ணை யிச்சித்த தலைவனொருவன்
சிலேடை வகையாற் கூறுதல்.

### பன்னிரு சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அன்பாற் போந்து கட்டுண்ப
தல்லா லெவர்க்கு மடங்காத
வத்திக் கிளையான் குன்றைமணி
யணியே மிடையுந் தெருவிடையே
யென்பாற் குயவன் கலையத்தா
லினிக்கு மான்பால் பகருதிரோ
இன்றேல் ஆண்பால் யாங்காணு
திட்ட குயவன் கலயத்தாற்

---

(33) அளங்கை - அங்கையிலுலள்ளப்படுகின்ற எனக்கூட்டுக. (34) கோலஞ்செறியும்-அழகுநெருங்கும். கோல் அஞ்சு எறியும்-பஞ்சபாணங்களை வீசி யெறியும். மறுகு-கடைவீதி. மதன்-மன்மதன். (35) அத்தி-யானை முக விநாயகர்.

றென்பாற் கேகப் பகருதிரோ
திகழித் தநியைக் கூடையிலே
சிறக்கக் காட்டி மலர்வாளி
தீத்த தாபந் தீர்த்தருள்வீர்

முன்பாற் கடற்கண் டுயில்கூர்ந்த
முகுந்தன் மிகுந்தன் மூதிசைபோல்
மூண்டு வளர்ந்த குலத்திரத
முதிர்வாய்ச் சியரே யாய்ச்சியரே. (35)

இதுவுமது.

ஏறு குடமல் லிகைமுல்லை
யெங்குஞ் செறிந்து கொங்குவிரிந்
திலங்குங் குன்றை மறுகினமு
கின்ன மெழுப்ப வருகிற்பீர்

கூறு நவநீ தந்தழலிற்
குழையுந் தரத்த ததுகொண்டே
குறியா வெமதி தையங்கொதித்துக்
குளிரும் புனலாய் வழிந்தோட

வேறு செய்த நவநீதம்
வியப்பே யிருளிற் கொணர்ந்ததுப்போ
வேண்டா தெளிவாய் நிலாப்போந்த
விரைத்துப் புணவே வேண்டுமதன்

கோறு மரிட்டம் யாங்கொள்ளான்
கூடக் கொணர்ந்தி ரேனுயர்ந்த
குடத்து மரிட்டம் கூடாது
கூடா தார்க்கும் பொதுவியரே. (36)

---

(36) இருள்-இருள்போன்ற கூந்தல். துப்பு-செய். துப்பு - பவளம் போன்ற இதழ். கோல்-(மன்மதன்) பாணம். தூம்-விடுகின்ற. அரிட்டம்-துன்பம். அரிட்டம்-மோர்.

## மதங்கியார்.

நடனஞ்செய்து பாடும் பெண்ணொருத்தியைக்கண்ட
காமத்தலைவனொருவன் கூறுதல்.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பொதுநடனம் பயில்பெருமான் மருமான்வாழ் குன்றைவளம்
பொலியுங் கீர்த்தி
மதுகடம்வாய் விரிந்ததெனை வாய்மலர்ந்து நாட்டியஞ்செய்
மதங்கி யாரே
கதுமெனம தனுமிலக்கு நாட்டியஞ்செய் தான்கடகக்
கரமி லங்க
எதுமனமீ ளவுநாந்த கங்கொண்டீர் நாந்தகந்தாங்
கிடற்கு மண்ணே. (37)

### இதுவுமது.

### பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பன்னு கின்ற சூரபன்மன்
வாழ்வு குன்ற வேல்விடு
மதுரை மிஞ்சு குமரனெந்தை
மருவு குன்றை நகரிலே
யுன்னு கின்ற செயல்பிறங்க
வபிந யங்கள் காட்டுவீ
ருமது சிந்தை யறியுமந்த
வுணர்வு தந்த தில்லையே
தின்னு கின்ற கண்டகஞ்
சுழற்ற வேது வேதரோ
தெளிவி றன்பு கண்டகஞ்
சிதைந்து நைந்து போயதே

---

(37) இலக்கு-லக்ஷியம். அஞ்சு-ஐந்துபுட்பபாணம். நாந்தகம்-நாந்தகமாட்டோம். (38) கண்டகம்-முள்வாள்.

பன்னு கின்ற நட்டம்விட்டி
யோக லாப மருடிரேற்
பாக்கியம் பலித்து மாவி
பாழி னட்ட மாகுமே. (38)

துதி.

விருத்தக் கலித்துறை.

ஆதியொ டந்த மேது மிகந்தோ ரறைலும்
பாதிய ணங்கோர் பாகன் மகன்சேய் பால்போலுஞ்
சாதிசெ வந்தி மாலதி கொன்றை சாதேவம்
ஊதிகை சந்த மாமலி குன்றை யூர்தானே. (39)

தலைவி துன்புறுதல் நோக்கிப் பாங்கி தலைவன் கொடுமை கூறுதல்.

பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நேர்போந் துய்தீத் திரட்பட்ட
நிலைமை யுலகம் படமுடிவி
னெகிழ்க்கு நுதலம் பகமுளரி
நிமல னருள்குன் றைப்பெருமான்
சார்போந் துயர முழுந்தோமேற்
றரிய லார்தாஞ் சிரியாபோ
சமண முதல மதங்களையச்
சண்டைக் கெழுந்த தருணத்தாண்
வார்போந் துயரப் பூம்பாளை
வாய்த்துக் காய்த்து வளஞ்சுரக்க
வைத்த திறத்தி னீங்குநனி
வருந்து மடலாண் முடிப்பெண்ணை

(38) நட்டம் - நடனம். யோகலாபம் - புணர்ச்சியாகிய ஊதியம். ஆகுமே-வினைப்பொருள். (39) பால் - இடம். சாதேவம் - நாவல். ஊதிகை - முல்லை. (40) முளரி - அக்கினி. சார்போம் - சார்புடையோம். போந்து-பனை. திறத்தின்-திறத்தைப்போல, மடல் ஆள்-பூவிதழ் ஆளப் பட்ட.

யார்போந் தெவ்வா றழைக்கினும்வந்
தவ்வா ருற்று னவனுக்கி
தாற்ற வாற்ற வரிதேயோ
வதுசெய் யாமை யிறும்பூதே. (40)

## பிச்சியார்.

முக்குறித் தொகுதியாக விபூதியும் சிந்தூரப்பொட்டும் சூலமும் கபாலமுந்
தாங்கிப் பித்துடையார்போலத் திரியும் பெண்ணொருத்தியைக் கண்ட
தலைவனொருவன் கூறுதல்.

பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தேறுசதுர் வேதமறை பிரணவத் துட்பொரு
டெளித்தபர மாசாரியன்
தேவகுஞ் சரியோடு வள்ளிமஞ் சரிகுலாய்ச்
செறிகுன்றை நகரத்தினே

கீறுதிரி புண்டரஞ் சிந்துரஞ் சுந்தரங்
கெழுநுதற் பிச்சியாரே
கேண்மினூர் வசிதிலோத் தமையாதி மாதர்கள்
கிளரெழிற் கோயிலெல்லா

மூறுமதி லாவண்ணி யத்தினுக் கேக்கற்
றொடுங்கியேற் றிடவுமன்னி
யோயாத வொண்மஞ் சுளப்பிச்சை யிடல்பிறர்க்
குரைசெய்திரு வோடுபொலிவீர்

மாறுபொரு மூவிலைப் படைகாளை கலையெலாம்
வன்பலி கொளக்கொண்டதோ
மனைகடொறு மடவார் வழங்குபலி கோடற்கு
வாய்ந்ததோ வாய்மலர்கவே. (41)

---

(40) ஆற்ற-மிக. இறும்பூது-ஆச்சரியம். (41) மஞ்சுளம்-அழகு.
திருவோடு-பிச்சையோடு.

இதுவுமது.

அறுசீர்க்கழி நெடிலடியாசிய விருத்தம்.

வேட்டுவரு வார்க்குருகு முருகுகுன்றை யருகுநின்று
வெருட்சிப் பார்வை
காட்டுபிச்சி யீர்சுடர்ச்செங் கதிர்நிவந்து மேனோக்கிக்
கனலப் பாலந்
தீட்டுசிந்தூ ரத்திலகத் தெரிவுந்தூ ரத்திலகத்
திரிவீர் முற்றும்
வீட்டுநுதல் விழியிணைதோ வேறுபய மற்றுளதோ
விளம்பீர் மாதோ. (42)

ஊசல்.

அஃதாவது, ஊசல் விளையாடுதற்குப் பெண்களொருவரையொருவரழைத்தல்.

கொச்சகக்கலிப்பா.

தோரண வாயிற் றுதைகழனி யிற்றுழனி
வாரணமூர் குன்றை மறுகை யெழில்பாடிக்
காரண மின்றிக் கடற்கெண்டை செய்வள்ளைப்
பூரணகோ பத்தினீர் பொன்னூச லாடாமோ
போதத் தகவுடையீர் பொன்னூச லாடாமோ. (43)

## தலைவிக்கு நேருந் துன்ப நிகழ்ச்சியைச் சகியாதவளாய்ப் பாங்கி தன்னுள்ளே சொல்லுதல்.

இதுவும் அது.

மோதுமே வந்து முழங்குமே பாழ்ங்கட லுங்
காதுமே வேளுங் கடப்பமே யிவ்விரவென்
றோதுமே மாதுமே லோங்கு மயின்மலைவே
ளேதுமே கூறா தினிக்கடப்பந் தார்தரினே. (44)

---

(43) கெண்டை-கண்; இது உருவகம். வள்ளை-வள்ளைக்கொடிபோன்ற காதினிடத்து. கோபம் - வாயிதழ்; இதுவும் உருவகம். (44) இதில், முன்னைய நான்கு ஏகாரங்களும் வினாப்பொருள் குறித்தன.

## சித்து.

அஃதாவது, பொய்வேடந் தரித்துவந்த சித்தருளொருவர் மெய்வேடந்தரித்த சித்தர் செய்யுஞ் செயலைச் செய்வோமென்று சிலேடைவகையாற் செப்பல்.

### பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தந்தை சீட னாகிவந்
　　திறைஞ்சு குன்றை யான்குகன்
சரண பங்க யத்துவந்
　　தயங்கு சிந்த சித்தரேஞ்

சிந்தை தேவ ரிறைவணங்கு
　　குருவை யெங்கண் முறையிறைஞ்
செம்பொ னென்று கண்டவித்தை
　　செகம றிந்த தில்லையோ

நிந்தை சேரி ரும்பையுந்
　　தராவை யுங்கொ ணர்ந்துநீர்
நேரி லுய்க்கி லரியதாண்
　　டணியெ னச்செய் கிற்பமால்

விந்தை யாவை யரியவிங்க
　　ணேது கின்ற தாமிர
மிசையு மாவி யற்றுவோம்
　　விழித்தி மைக்கு முன்னமே. (45)

### இதுவும் அது.

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மேக்குவளர் குன்றைவரை விழைமுழைவிட் டிழிந்துலக
　　வீபரீ தத்தை
நோக்குநகை சிறிதுகொடு வந்தசித்த ரேமப்பர்
　　றுவனு கத்தைத்

(45) துவம்-இரண்டு.

தேக்குமா சுணமாக்கி யெங்குமே கம்பரந்த
தேவுக் கீந்தோம்
வாக்குமறா துண்டுசிவந் தானைமக்கா காரமர
வக்கான் மண்றே. (46)

## சம்பிரதம்.

அஃதாவது, சித்து, இவ்விரண்டும் சொல்லால் வேறுபாடல்லாமற் பொருளால் வேறுபாடில்லை.

### பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

மன்னவா காயத்தை விரலாற் சுழற்றியதை
மாறியவ் வாறுவைப்பேன்
வையமீர்த் தோடுகோ ரங்காட்டு வேறொரு
வரையுடைத் துணைகொள்வேன்

துன்னவா னம்புவனம் வாசால கத்தினுல்
தொந்தமுற வொன்றாக்குவேன்
சொலற்கரு திறற்றனஞ் செயனையடு தொழில்வரில்
உரவிற கிட்டெரிப்பே

னன்னவா னீமனைச் சிறைகொண் டடித்துவெளி
யலையப் பறக்கவிடுவே
ஞானமந் திரமில்லை விரனுதிப் பன்னக
மடிக்கடி யெடுத்தெறிகுவே

னின்னவா றின்னமு மியற்றுமிவை வித்தையோ
வினிதட்ட சேவன்மீன
மின்சகாவி னுயிர்பெற் றெழுந்தோடு மயின்மலையி
னிங்கொர்பதி காண்பிப்பனே. (47)

---

(46) ஏகம்-ஏகமாக. ஆரவக்கால்-ஓசையுடைய காற்று. (47) வீமனை-
நூடனை. காவின்-காவடியினின்று. பதி-இறைவன், முருகக்கடவுள்.

## தூது.

### விருத்தக் கலித்துறை.

காணுங் கல்லுங் கண்ணும் மனமுங் கமழ்நின்றாள்
பூணுங் கையுஞ் செய்யும் படியம் புயநாதற்
கேணுங் சேணும் மெய்ந்தில வாஞ்ஞை யிவாயோ
மாணுங் குன்றை வாழுமி லங்கை மறவேனே. (48)

## இதுவுமது.

### பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மறமொன்று மறியாத குறைநிறை தயாவாரி
வார்த்தெங்க ணும்பரந்து
வந்தொரு நீடித் திளைக்குங் களைப்பாற
வாழ்விணு டித்திளைக்குங்

திறமொன்று குன்றைப் பொருப்பினை விருப்பினைத்
தீராத பரமகுருவைச்
சேர்ந்தோரைத் தேவகிரி காந்தனைச் சிறியனேன்
சிந்தனை விடாக்கந்தனை

முறமொன்று தழைசெவிக் கடையெழுங் காற்றினை
மூண்டுகட் செவியுண்டிடு
மும்மதத் தோற்கிளைய சண்முகத் திறையையொரு
முறைகார்த் திகைத்தினத்தே

நிறமொன்று பொற்குடுமி நெறிசென்று கற்றுவி
வெஞ்சிற் கசிந்துநோக்கி
நிற்பினோ ருள்ளுவ வொருங்கங்க னேபெறுதிர்
நேர்தவம் பிறிதில்லையே. (49)

## இதுவுமது.

### இதுவும் பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இல்லை பன்னையை யரும்பொருளை
யில்லை யெனலுந் தொல்லைநெறி
யின்றி பணமயா வவற்றைவிதி
யிகந்து தள்ளு முள்ளுமொர்கா

---

(48) கண்ணும் - கருதும். எண் - வலிமை.

லொல்லை யெழுப்புங் கொடுஞ்சினத்தா
 றொன்று முன்பின் னோக்காதே
யுதிக்கு முவர்ப்புங் கபடத்தா
 னுதரப் பிழைப்புங் காரணமா
வெல்லை கிடையாப் பொய்வேட
 மெங்குஞ் சுமந்து திரிந்துழலு
மேழைப் போலிப் படிவத்தி
 ரிலைதா துறவப் பயனெலைின்
வல்லை வளமார் மயின்மலைமேல்
 வைகும் வடிவேல் தாங்குமொரு
மறவன் சரண பங்கயத்தின்
 வண்டா ராகி வழுத்துமினே. (50)

## கொற்றியார்.

வயிணவவேடந்தாங்கித்திரியும் பெண்ணொருத்தியைப் பார்த்துக்காமித்த ஒருவன் கூறுதல்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வழித்தகத்தூ ரிச்சேறு மாறாத வருவிமயின்
 மலையிற் றண்டண்
கொழித்ததிரு வாய்மொழியிற் குவலயமெல் லாமயக்குங்
 கொற்றி யாரே
செழித்தகோ டாங்கருகல் கட்டுண்டன் முதலாய
 செறியா வாறு
மழித்தவள கக்கடத்தை வாய்ந்திர்சற் றெயிற்றளகம்
 வழங்கு வீரே. (51)

## இதுவுமது.

பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வழங்கு கோடி வரம்புயங்க
 மகிப னுஞ்சொல வரியிலா
மயின்ம லைக்குக னுளநேம
 வளங்கொ ழும்பெயர் நாட்டிலே

(50) மறவன் - வீரன். (51) அளகம்-நீ

தழங்கு நந்துசு தரிசனங்கதை
சாபம் வாளடை யாளமே
தாங்கி யந்தர நின்றிழிந்தன
தகைமை முற்றிய கொற்றியார்

முழங்கு பைங்கட னீலமேனி
முராரி மோகினி யாயினு
முழுதை யுஞ்சதி ரிசமியம்புதன்
முடிவு ருதவர் காமநோய்க்

கிழங்கு போனகி லகிலமாழ்குறு
கேடு சூழ்தலின் வீடுறூர்
கெழீஇய தம்மில மெம்மிலம்புகு
கிற்பி னேதொரு நீதமோ. (52)

## வண்டுவிடு தூது.

அஃதாவது, பிரிந்துபோன தலைவனுக்குத் தலைவி.
தன் வருத்தத்தைச்சொல்லி வண்டைத்தூதாக அனுப்புதல்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

அராபதங்கா ளெங்கண்க ளனையீர்நீர் நுமையல்லா
லன்பர் யாரே
தராபதந்தாந் தொழும்விருப்பிற் சார்ந்தென்று மிடைகுன்றைச்
சயிலம் போய்ச்சென்
றிராபதந்தா ஞென்றுமந்தோ விக்கிளிவாய்க் கன்றுமுத
லென்று சேர்ந்தற்
றராபதந்தா வாப்பொழிற்பூஞ் சுராவிதமாந் தாத்தெவிட்டச்
சார்திர் மாதோ. (53)

---

(52) சதிரிசம்-ஒப்பு. நகில-நகிலால், நகிலமென்பதன் குறுக்கல். தம்மிலம்-மயிர்முடி. (53) அராபதம்-வண்டு. தரா - உலகிலுள்ளார். இரா-இருக்கமாட்டாது. பத்து-சோறு. தரா-வந்து. பதம்-காலால்,

இதுவுமது.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மாப்பெயரும் பெறீஇவிரைவிற் செலவாறு கால்வாய்ந்து
மன்னுஞ் சாதி
மீப்பெயருங் குடிமல்கி யார்க்குமரீ யீரெமக்கு
மிகவு நண்பீர்
கோப்பெயருங் கொடிமாடக் குன்றையிற்சே றாறோடுங்
குடிக்க லாமிக்
காப்பெயரு முருகைமணங் கீர்யாமு மவ்வண்ணங்
களிக்கு மாறே. (54)

மெய்தொட்டுப் பயிறல்.

அஃதாவது, தனியிடத்துக்கண்ட தலைவி பேசாதிருக்கத் தலைவன்
அவள் சரீரத்தினுறுப்பைப்பற்றிப் பேசிப்பழகுதல்.

கட்டளைக் கலித்துறை.

மாறின்றித் தூங்கும்வெள் வேற்குன்றை யேந்தல் வரையகத்தே
யீறின்றி நாளும் வளரெழிற் பேதைதன் யாதுமிடை
யூறின்றி நீண்டு கழல்வீழுங் கோதை யுறுங்குழலைச்
சாறின்றி வேறொன் றுணவறி யாவண்டர் தாக்கனமினே. (55)

வலைச்சியார்.

வலையாற்பிடித்த மீன்விற்கும் பெண்ணொருத்தியைப்பார்த்த
தலைவனொருவன் விகடமாகப் பேசுதல்.

பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தாக்கும் புலிக்கும் பதஞ்சலிக்குந்
தந்தோம் தந்தோம் மீடென்று
சபைக்க ணடிக்கு முதனுதற்செந்
தழற்க ணுயிர்க்குந் தமிழ்த்தெய்வந்

(54) கோ-ஆகாயம். (55) வீழுங்குழலையெனக் கூட்டுக. வண்டர்-
வண்டுகளே.

காக்குங் குன்றைக் கிரிமறுகிற்
கண்டே மனமீ னம்படவே
களிக்கு மீனம் பாணியிடைக்
கறங்கப் பாணி யினிற்சால

மூக்குந் திறத்திற் கூலமிழுத்
தூறுகூ றியற்றிக் கொண்டுவிற்கு
மொறுக்குஞ் செய்கை வலைச்சியரே
யுங்க ளியலு நயனமூக் கேதாற்

பாக்குந் தரத்த வனமயிலே
யடைய மீளக் கொணர்ந்துமுனி
வாற்று தேதி லார்க்குவிலை
யாற்ற வாற்ற லைகிதன் றே. (56)

## இதுவுமது.

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஆறு தடுக்குங் கிரவுஞ்சத் தடற்று ரகனை யலைறிவிறக்
கூறு படுக்கு மாறுமுகன் குன்றைப் பொருப்பின் வலைச்சியரே
யீறு கொடுக்க விழிச்சாலத் தெவையும் படுப்பீ ரென்மேனுஞ்
சேறு தொடுத்த முடைச்சாலந் தெரியோ நுமது சிந்தனையே. (57)

## துதி.

### கலிவிருத்தம்.

சிந்தனை வந்தனை செய்ய கிற்கிலே
னிந்தனை யாவையு நீங்கி னுயலே
நந்தனை மிடைதரு நளினி சூழ்குன்றைக்
கந்தனை யலதியார் கருணை மூர்த்தியே. (58)

---

(56) பாணியினில் - நீரில். சாலம்-வலை. கூலம் - கரையினிடத்து.
(57) முடை - துர்க்கந்தம். சாலம்-வலை. (58) நளினி-இலக்குமி.

## தழைவியந்துரைத்தல்.

அஃதாவது, தலைவன் கொண்டுவந்த மாந்தழையைத் தோழி தலைவிக்குக்கொடுக்கத் தலைவி வாங்கி மகிழ்ந்து தோழிக்குச் சொல்லுதல்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

திக்கந்த மிசையிசைக்குன் றைக்கந்தன் முகமலர்ந்து
செழித்தென் னெஞ்சிற்
றுக்கந்த விர்ந்தின்பந் தழையென்று தந்ததழை
தோழி கேளா
யிக்கந்தம் பொலிசிலைபைங் கணைக்கிழவன் பல்லவத்தை
யில்ல வாகப்
புக்கந்தங் கண்டிடுவல் லரியாகி நிறைந்ததென்ன
புதுமை தானே. (59)

இதுவுமது.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

புதிய வாசனை கமழ்தரு குன்றையம்
பொலங்கிரிப் பூங்காவி
னிதிய வாண்டகை யருளிய தளிமுறி
நிகழ்த்துறிற் பிறிதன்றன்
மதிய வாண்முக மடவரால் எனக்கினி
மதன்கணை மலர்யாதும்
பதிய வாற்றுவ திலையெனத் தனதுகைப்
படவரை முறியாமே. (60)

## குறித்தகாலத்தில் வராத தலைவனை நினைந்து வருந்துந் தலைவியின் துன்பத்தை நோக்கித் தலைவன் கொடுமையைத் தோழி கூறுதல்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

முறைதவறு நெறியையுல கனைத்துயிர்க்கும் பயிற்றுவிக்கு
முதல்வன் குன்றை
யிறைதவறு தாவணியுங் கன்னியும்வந் தணைமதியென்
றெண்ணி யெண்ணி

---

(59) பல்லவம்-பாணம். அந்தம்-முடிவு. (60) முறி-தளிர்.

நிறைதவறு தாவணியுங் கன்னியுமம் மரிற்கழித்தா
ணினைகி லானே
மறைதவறு வாய்மையெம்போ லேழையர்க்கே யோவலியோர்
மறுக்கின் மாதே. (61)

## துதி.

கோச்சகக்கலிப்பா.

மாண்டலையைப் புவனமுமே விடிவிக்கும் வலிச்செஞ்சூட்
டாண்டலைவண் டுவசமொடு பெண்டலைத்தே வருள்வேலும்
வேண்டலைநெஞ் சேகுன்றைப் பதியினையும் விழைந்திலையா
ணீண்டலையொத் தியமன்வரு மமையத்தார் நிறுத்துவரே. (62)

## கூதிர்க்காலம் வந்துந் தலைவன் வருதலைக் காணாத தலைவி வருந்தல்.

கட்டளைக் கலித்துறை.

நிறுக்குந் துலாவனை யானெமை யீண்டு நிறுத்தியுளம்
பொறுக்கும் படிசொற் றனதூக்குந் துட்டனும் பொங்குதிங்க
ளொறுக்கும் பிரான்விழி வெந்தூக்குந் துட்டனு மோங்குயிரை
யறுக்குந் துயர்தெரிந் தானில்லை யேகுன்றை யாண்டகையே. (63)

## முன் பனிக்காலம்.

அஃதாவது, தலைவன் வருதலை யெதிர்பார்த்திருந்த
தலைவியின் துன்பத்தைப் பாங்கி கூறுதல்.

நேரிசை வெண்பா.

ஆதவனுந் தண்டலையி லூறியிருந் தேகுகுன்றை
மாதவனு மாதை மறப்பதே—காதலந்த
மார்கழிக்குந் தைக்கும் வழிபார்த்தோய்ந் தாள்கண்ணீர்
மார்கழிக்குந் தைக்கும் மலர். (64)

---

(61) ஆ-ஆச்சரியமாக. அணியும்-ஆபரணங்களையும். கன்னி-இளமைத் தன்மை. மம்மர்-மயக்கம். (62) மாண்டலை-மாட்சிமை தங்கிய இடத்தை யுடைய. (63) தூக்கு - துலாராசி, ஐப்பசி மாதம். துட்டன் - விருச்சிக ராசி, கார்த்திகை மாதம். இவ்விரு மாதங்களும் கூதிர்க்காலம். ஊக்குந்துட்டன்-உற்சாகங்கொள்ளுந் துட்டனாகிய மன்மதன். (64) நீர்-நீரை. மார்-மார்பினிடத்து. மலர்-புட்பபாணம்.

## பின் பனிக்காலம்.

*அஃதாவது, மாசியும், பங்குனியும் நீங்குமுன்னர் வருவேனென்ற தலைவர் வாக்காணமையால் தலைவி வருந்தல்.*

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மஞ்சேசாவா நெடுஞ்சிகர வரைக்குன்றை மானனையீர்
 மகிழ்வோ டஞ்சக்
குஞ்சேசாவா காயமின்னற் கொடியோவென் றெத்தனையோ
 கூறிக் கூடி
நஞ்சேசாவா னக்கொட்ட நகர்நீர்ந்து கும்பமீ
 னம்போ முன்னர்
நெஞ்சேசாவா தணையகல முலைக்கும்ப மீனமுறு
 நிலைசெய் யாரே. (65)

## இளவேனிற் காலம்.

*அஃதாவது, சித்திரையும் வைகாசியும் நீங்குமுன்னர் வருவேனென்ற தலைவர் வாராததனால் தலைவி அழகழிந்திருப்பதைப் பாங்கி கூறுதல்.*

கட்டளைக்கலித்துறை.

ஆஞ்சித்த நேசித் தவர்க்கருள் குன்றையம் மண்ணலெங்குந்
தாஞ்சித் தசித்தனைத் துஞ்செறி யும்மிறை தான்குறித்துப்
போஞ்சித் திரையும்வை காசியுஞ் சென்றன பொட்டுமிடாள்
வாஞ்சித் திரையும்வை காசியென் றேபுமிழ் வாள்மயிலே. (66)

## முதுவேனில்.

*அஃதாவது, ஆனி ஆடி மாதங்களிற்சொன்னபடி தலைவன் வாராமையால் தலைவி யுடல் மெலிந்துவருவதைத் தோழி மற்றைப்பெண்களுக்குக் கூறுதல்.*

கட்டளைக்கலித்துறை.

வாள்விழி யொக்கு மடந்தைநல் லீர்குன்றை வாழடியார்
கேள்சொலக் கிள்ளையுங் கேட்டதன் றேவுட் கிளர்வுறுமா
மீள்வில ணாணியை யாடியைக் கூறினன் மீண்டிலன்மின்
னுட லாணியை யாடியை நோக்கி யயருவளே. (67)

---

(65) அஞ்சக்குஞ்சோ-இள அன்னப்பறவையோ. சோ-மதில். கும்பம், மீனம்-மாசிமாதம், பங்குனிமாதம். இவ்விரண்டு மாதமும் பின்பனிக்காலம். (66) சித்து-அறிவுடைப்பொருள். அசித்து-அறிவில்லாப்பொருள். இரையும்-உணவுப்பொருளும். வைகா-தங்காது. (67) அடியார்கேள்-தொண்டர் நண்பராகிய தலைவன். ஆணியை-அழிவை. ஆடி-கண்ணாடி.

## தலைவன் கலவியினருமையை நினைந்து தலைவி யிரங்கல்.

பதின்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வதுவையுற வென்று மகலாத மயூரகிரி குன்றை வளைமேவு
வரதனெறி சென்ற முனிவோர்கள் மனமாரும்
விதுவையணி கின்ற சடைநீடு பரமனுதல் வந்த குமரேசன்
விழைபுமயல் கொண்டு பொழுதொடு குழல்வாரி
மதுவமலி கந்த மலர்மாலை சொருகியுட லொன்ற வுறவாடி
மருவியித முண்ட வசமான தினமேபோ
யெதுபொழுது மன்றி யினிமேலு மதனசுக சிந்து விடைமூழ்கி
யெறியுமல ரம்பு தொடையாக வுறுநாளே. (68)

## தனியிடத்துக்கண்ட தலைவியைத் தலைவன் இவள் எந்தவுலகத்துப் பெண்ணோவென்று சந்தேகித்தல்.

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நாளபங் கசவதன மோகசுந் தரவிரதி
நாடுமஞ் சுளமொழுகும் அந்தர மடந்தையோ
காளகந் தரவகில நாயகன் பொலிகயிலை
காதல்கொண் டுலவிவரு கந்தருவ மங்கையோ
நீளவெம் பணியரவு பாதலங் கெழுமகள்கொ
ணீடுபைங் கடலகில நின்றுபயில் கொம்பரோ
தாளவந் தனைகொடன மாதுருஞ் சரிமருவு
சாமிகுன் றையின்மயர்வு தந்துலவு வஞ்சியே. (69)

---

(68) மதுவம் - தேன். அவசம் - தன்வசமிழத்தல். தொடையாக-மாலையாக. (69) மஞ்சுளம்-அழகு. தாளவந்தனை (உவமையாகாமல்) தாளஞ் செய்யும் வணக்கம். மயர்வு-மயக்கம்.

## தோழி தலைவியினது நலம்புனைந்துரைத்தல்.

நேரிசை வெண்பா.

வஞ்சிக்கு மேலா வயங்குமிடை மாதரெங்கண்
வஞ்சிக்கு மேலாட வர்க்குண்டோ—மஞ்சுக்கு
வாளைவணங் காச்சிதறி வாவுகுன்றை யம்மடமான்
றாளை வணங்காத் தாம். (70)

## தனியிடத்துக்கண்ட தலைவியின் அவயவங்களை வருணித்துத் தலைவன் மகிழ்ந்து கூறுதல்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தயமகம்.

தாங்கண்டம் புயபாதந் தருங்குன்றைக் குமரேசன்
றடங்குன்றாட
தாங்கண்ட முகந்துவர்சுந் தரநந்த நிறைபிந்தந்
தனதொந் தம்பூ
தாங்கண்ட மொழியல்குற் றடங்குண்டு சுனையிவற்றைச்
சாரா மேபமீ
றாங்கண்டங் கொண்டமின்று புறங்கண்டங் கண்டகம
தனையுந் தானே. (71)

## மேகவிடு தூது.

அஃதாவது, பிரிந்துபோன தலைவனுக்குத் தலைவி மேகத்தைத் தூதாக விடுத்தல்.

பதின்மூன்றுசீர்ச் சந்தவிருத்தம்.

தனையே தானுண ராதபு ராதன
னுதல்மே லெகிமிர் திவிழி வாய்வரு
சமரா மோதத யாநிதி காமரு முருகேசன்

(70) எங்கள்-எம்மிடத்து. மஞ்சுக்கு-மேகத்தினிடத்து. வள்-வளம். அம்-அழகு. தாம்-தகுதி. (71) தொந்தம்-இரண்டு. கண்டம்-சர்க்கரை. கொண்டம் - கொண்டோம். கண்டகம் - உடைவாள். (72) ஆமோதம்-மகிழ்ச்சி.

பனேயே போல்விழு நீள்கர வாரண
னிளேயோன் வானவி யானேம னேகர
பரமா சாரிய னேழைய ரேமுள முழுதாள்வோன்
றினேயே போழ்துமி யான்மற வாதது
தெரியா ளேமுகில் காளரு ளாவிது
திறலோ மாதரை யாடவ ரோவுதன் முறைதானே
வினேதீர் சீர்மயின் மாமலே மேவுமெ
திடமா மேயவண் மேவிய காலேயின்
விடலீ ரோதுமின் யாவையு மாதர வொழியாதே. (72)

## நாரைவிடு தூது.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தேரைவலம் படவுதைத்துத் தினஞ்செய்ப்பா லுவுகயனந்
திகைப்பப் பொன்செ
யூரைவலம் படவோவின் றுளமவலம் படப்போந்த
துணர்கி லாளே
நாரைவலம் படச்சேற னலம்படவென் றிடநின்றாய்
நார வீரைச்
சூரைவலம் படவெறிந்த குன்றையனெம் மிடமாகச்
சூழ்போ தாவே. (73)

இதுவுமது.

போதாவே தனேமறந்து புணர்ந்துகளிக் குறுநாளிப்
போழ்து போகா
வோதாவே தனேயுடற்று மறுபதுகன் னலுங்கன்ன
லொன்றி னுய்ய
வேதாவே தனேதானும் பகையானுள் பிதாவேநீ
யேனுஞ் சென்று
மோதாவே தனேயலேக்குங் குன்றைமுரு கனேயணேய
மொழிந்தி டாயே. (74)

---

(73) போதாவே-நாரையே. (74) ஏது-காரணம், ஆ-ஆச்சரியம், ஏது-எது. பிதா-நாரை,

## கலவியிற் பிரிவு கூறிய தலைவனைப் பாங்கி தடுத்தல்.

பன்னிரு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஆசு மதுரஞ் சித்திரம்வித்
தாரம் பயிற்றும் பிடியிடையு
மாலோன் மலர்த்தா வரைக்காம்ப
லவிழ்க்கு மிளிக்குங் குளிர்மொழியு
மேசு தவிரு நினதுமனத்
தெழுது பழுதி றிருவுருவு
மிறையூ டேகத் தவஞ்செயினு
மிறையாக் குசயு களமுமுடற்
றேசு குறிக்கிற் காண்டிகைக்குஞ்
சிறப்பின் விருத்தி யுரைக்குமொரு
சிறிது முளது சொல்லோசந்
தேக மிலக்க ணைப்பலவு
மூசு மிலக்கி யமுநின்பான்
முதுகிற்பவனை யொரீஇத்தமிழை
முயலக் கழகம் புகனகைப்பே
முறையோ குன்றை யிறையோனே. (75)

இதுவுமது.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இறையுமிவட் பிரியாத குன்றையதி பதிவடநூ
லியல்புந் தேற
நிறையுமவா வுளதாயின் விழியேகா வியங்காட்டு
நெறியே நீயுள்
ளுறையுமா நாடகமு மலங்கார முந்தவிர்த்த
தொருநா ளுண்டோ
பறையுமிகு தர்க்கமெலா மொழிவள்செல்லேல் சேண்போய்க்கற்
பனவென் மன்னே. (76)

---

(75) ஆசு-சிலேடை வகையால் அற்பம். (76) செல்லேல்-போகாதே, சேண்-தூரதேசத்தில்,

## கவிக்கூற்று.

*அஃதாவது, பாட்டுடைத்தலைவனைப் புலவன் புகழ்ந்து கூறுதல்.*

### கட்டளைக்கலித்துறை.

நோதவிர் குன்றை வரைபுரை தோளநின் றேன்கமலப்
போதவிர் விக்கு மிரவியுங் காண்பரும் பூம்பிணையற்
றாதவிழ் மார்ப கலமூரய் கண்டவை தாம்பொதுவாய்
பாதவி ராகத்துக் காகு பெயரெனும் வண்புவியே. (77)

## கையுறை மறுத்தல்.

*அஃதாவது, தலைவன் தலைவிக்குக் கொடுக்கும்படி கொடுத்த முத்து மாலையைத் தோழி மறுத்துக் கூறல்.*

### கட்டளைக்கலித்துறை.

வண்டானந் தாமரை யார்குன்றை வாணன் வரையினியல்
வண்டானந் தாழுங் கரிமத் தகத்தின் வருந்திடைது
வண்டானந் தாமுத்த மாலையெவ் வாறணி வந்தவா
வண்டானந் தாநய னங்கள மென்றுசொன் மாணிழைக்கே. (78)

## இடபணித் தென்றல்.

*அஃதாவது, தலைவியைப் பாலை நிலத்தின் வழியே கூட்டிச் செல்கின்ற தலைவன் தலைவி வருத்தத்தைக் கண்டு தன்னூர் சமீபித்துவிட்ட தென்று தேற்றுதல்.*

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

கேதனங்கா யஞ்செறியக் குளிர்குன்றைக் கிரியைவல்லே
கிளர்மு கத்துச்
சீதனங்கா யந்தேனு றும்மரியை யுந்தவிர்ந்தேந்
திருநெல் லைப்பேர்ப்

---

(77) நின்மார்பெனக் கூட்டுக. மாது - அழகு. (78) வண்டானம்-நாரை. (79) கேதனம்-கொடி. அரியை-அரியக்குடியென்ற தென்றிருப்பதி, நெல்லைப்பேர் அங்கணையெனக் கூட்டுக.

போதனங்கா யங்கணைகொண் கன்கழனி யம்பதியும்
புரையில் யோக
சாதனங்கா யம்பதியும் வடுமுனியூ ருங்கடந்தே தஞ்
சார்து நாமே. (79)

இதுவுமது.

மேலிலதிர்தும் ஆயிரங்கட் கோபுரமும் மிகக்கலங்கி
விலங்கி மாழ்க
மாலனைய மருதுபாண் டியன்செய்திருக் கோபுரமு
மதுர மேன்மைப்
பாலலைகொள் கடலைவிரு தாபுரியும் படிபடிகள்
பண்பி றேங்கிச்
சாலுயர்நெடுங் கடமருதா புரியுமொரு நொடியிலென்பு
தழீஇச்செல் வோமே. (80)

## மடல் விலக்கு.

அஃதாவது, தலைவன் தலைவியை யடையப்பெறாமல் மடலேறத்துணி தல் கண்டு பாங்கி விலக்குதல். மடலேறுதலின் பொருள் விரிவைத் திருப் பரங்கிரிப் பிரபந்தத் திரட்டி லுள்ள பரங்கிரிக்கோவை 119-ம் பாட்டினடியிற் கண்டு கொள்க.

கட்டளைக் கலித்துறை.

வேடகஞ் சானன மீன்றொழுங் குன்றையெம் வித்தகன்றாட்
கூடகங் கன்னியந் தேனாருக் கிச்சையுங் கொண்டதுண்டேற்
றோடகஞ் சேர்மது மாலைய நீண்மது வைசிதற
ஏடகஞ் சாடி யசுவஞ்செய் தேற விதமல்லவே. (81)

---

(79) கழனியம்பதி-கோவிலூர். வடுமுனியூர் - பாதரக்குடி. கிரியை வல்லே சார்துமெனக் கூட்டுக. (80) கோபுரம்-இந்திரனுலகம். விருதா- லீஞ்சக. (81) ஊரு-தொடை. மதுரை-கள்; ஏடகம்-பனை.

## துதி.

பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வேர்க்குந் திறமா சுரநாடு
மேவ அறமா சுரரொருங்கு
விளிக்குந் தெய்வத் திருநாம
விநோதஞ் செறியு மயின்மலையி

லார்க்கும் பிறவி நோய்க்கெல்லா
மரிய மருந்தாண் டமுதமருந்
ததிதி பெறுவார் மருண்டுவெருண்
டலற மருந்து கொடும்பகையைத்

தீர்க்கு மிசைய மருந்தாவிச்
செவ்வேல் கரமேற் படர்ந்துகதிர்
திகழ்ந்து விரிந்து வெட்டுவர்தந்
சிறுமி யறியு மதைநினைந்தார்

பார்க்கும் பெருந்தீ ரகாரிளகும்
பழுதீ ருருத்தி யதிமதுரம்
பரவிக் கலந்து தினமுண்பின்
பாரந் தீரும் பிணிதாமே. (82)

இதுவுமது.

மேற்படி வேறு.

நாவிலிசை முப்பத்து முக்கோடி தேவருந்
தாழ்ந்துதிக் கோடி மறையச்
சதகோடி தாங்கிவெண் ணூற்கோடி வருகின்ற
தந்தியுந் திக்கெலாது

(82) அலறு அயர் உந்து என்பிரிக்க. தூவென்பது குறுக்கல்விகாரமாய்த் தவ்வென்றாயிற்று. (83) சதகோடி தாங்கி-வச்சிராயுதத்தைத் தாங்கிய இந்திரன். தாங்கி-வினையாலணையும் பெயர்.

பூவிலடி படவணுகி யங்காழி யம்பதிப்
பொங்காழி யம்பதிகமாப்
போய்க்கரை புரண்டுதேங் கக்கா விரிப்பூம்
புனற்பெருக் காறுசோர
வோவில்வள நந்தன வனஞ்செழிப் புறவளர்த்
தொளியவலர் காணவோட்டு
மோங்குதவ மிகுசூர பன்மாபன் மாயையு
மொழிந்தோய்ந்தொர் மாவாகவூழ்
வீவிலத் தியுமஞ்சு மாபிளந் தறுமா
விசும்பினெழு மாச்சுடர்தெறும்
வெள்வேலை மயின்மலைச் செவ்வேள் பொறுக்கநமன்
விடுகழுமு ளென்செய்யுமே. (83)

## அன்னவிடு தூது.

அஃதாவது, பிரிந்துபோன தலைவன் வாராமையால்
தலைவிபடுந் துன்பத்தைக்கண்டு சகியாதவளாகிய தோழி கூறுதல்.

### விருத்தக் கலித்துறை.

மேதினித் திலதமொத்த விருமயின் மலையிற் கஞ்சப்
போதினித் திலம்வைத் தன்ன பொலன்றெரி செவ்வாய் வெண்பன்
மாதினித் திலப்போழ்தையு மனம்பொருள் செவ்வேள் சேர
வோதினித் திலபா லன்ன முவர்க்கும்பா லன்னம் நீயே. (84)

## தோழி தலைவியின் துன்பநிலை கூறுதல்.

### நேரிசை வெண்பா.

நீபந் தருமாலை நேர்ந்துகுன்றை யேந்தல்முலை
மாபந் தருமாலை வன்மொழியே—சாபநுத
லொன்றுமின்ன லென்று மொழிந்தாள்கண் ணீர்மாலை
யொன்றுமின்ன ~~[illegible]~~ லானாள். (85)

---

(83) பூவில்-பூமியில். காழியம்பதியணுகியெனக்கூட்டுக. ஓட்டும் - (இந்திரனை) விரட்டும். சூரபன்மா அறுமாபிளந்தெனக்கூட்டுக. அறுமா - அறுமாறு. (84) பால்-வெள்ளிய. அன்னம்-அன்னப்பறவை; இது அண்மைவிளி. (85) நீபம்-கடம்பு. ஒன்றும்-பொருந்தும். மாலை-மாலைக்காலம். குன்றையேந்தல்-நீபந்தருமாலையெனக் கூட்டுக.

## துதி.

பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

உத்திப் படாடவித் தடநெடும் பாயற்க
ணுறங்கன்வள ருங்கொண்மூவி
னுடன்வந்த சயிலகனை ருசிதந்த நீராத
வொருசோதி யேவிசாகப்
பத்திப் படாமுலை பராக்கைமா தங்கரும்
பம்பொருவு பந்தாரகைப்
பாவுகுழ வினினனி சிறந்துகேட் டைப்பெருப்
பண்புகொள வுற்பவித்துத்
தித்திப் படாநின்ற மழலைமொழி யமிழ்தினைத்
தேவருஞ் சீவிக்கவாய்
திறந்தஞ்சன் மின்னென்ற மறைமூல மேநினது
சீறடிப் போ தருள்வையோ
கத்திப் படாதெழு பவக்கடல் கடப்பக்
களித்துநீ வதிகுன்றையங்
கல்லகங் கல்லகங் கண்டுருகி நின்றெறக்
கழுத்தமொ ழிருக்கவென்றே. (86)

## தலைவியைக் கண்டுவந்த தலைவன் பாங்கனுக்கு உற்றதுரைத்தல்.

கட்டளைக்கலித்துறை.

இருக்கோவை நேர்ம தலையார் மதலை யிலங்குகுன்றைச்
செருக்கோவை வேலிறை வன்வன் கிரியிற் றிகழுநண்பா
மருக்கோவை வாய்ச்சி யரிசைவ ரேகொன் மதித்துநம்மேற்
றிருக்கோவை யார்திரு வாசக மேதுந் தெரிந்திலரே. (87)

---

(86) விசாகபம்மெனக் கூட்டுக, பம்-நக்ஷத்திரம். இப்பாட்டில் சோதி விசாகம், பனை அனுஷம். கேட்டை மூலம் என்னும் அடுக்குநயம் வந்தமை காண்க. (87) ஓவை-ஓகாரவடிவத்தை. மதலை-கொன்றை. செருக்கோ யுத்தத்துக்குத்தலைவன்.

## நாரைவிடுதூது.

அஃதாவது, மன்மதன் பாணத்தாற் படுந்துன்பத்தைச் சொல்லி நாரையைத் தலைவிதலைவனுக்குத் தூதாக விடுத்தல்.

நேரிசை வெண்பா.

தெண்டிரைக்கும் வண்டிரைக்குந் தேமாங் குயிற்குமினை
வுண்டிரைக்குக் குன்றைக்கோ டுங்குருகே—பெண்டிரைத்தான்
பாகம் பொறுக்கும் பதிக்கையன் பால்மொழிபூச்
சேகம் பொறுக்குந் திறம். (88)

## தலைவனைக்கண்ட தலைவி இவன் எவனோவென்று சந்தேகித்தல்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இரத்தவர்மே வியகுன்றைப் பதியாளும் பெருமானுட்
டெளிவு பற்றாத்
தரத்தவர்புன் கண்ணோக்க மறைபவனோ வேன்மன்னன்
றானோ யானைக்
கரத்தவர்பின் னர்த்தோன்று மிளங்கோவோ பூருநாண்
கழற்றாத் தெய்வ
வுரத்தவர்நேர் சசிக்கருண்மாங் கலியருக் திரனோவென்
னுரைத்து மாதோ. (89)

## புறங்காட்டல்.

அஃதாவது, தலைவி முதுகுகாட்டிப் படுக்கையிற் கிடக்கும்போது தலைவன் கூறுதல்.

கட்டளைக் கலித்துறை.

உரைக்குந் தகைக்குகன் குன்றையன் னீர்நும் முழைக்கனக
நிரைக்குஞ் சுவர்க்கத் தொடுமதி மண்டல நேடியென்னுட்
கரைக்குஞ் சுவையமு தம்பெறு மாறு கருதிவந்தேன்
விரைக்குந் தளவிடங் காட்டுகின் றீரென் விதிவசமே. (90)

---

(88) இனைவுண்டு-துன்பமுள்ளது. பூ-மலராகிய. சேகம்பு-வயிரமுள்ள பாணம். (89) பூரு-புருவம். சசி-இந்திராணி. (90) சுவர்க்கம்-கொங்கை. மதிமண்டலம்-முகம். சுவையமுதம்-மதுரமாகிய காமஇன்பம். குந்தளவிடம்-கூந்தலாகிய விஷம்.

## பாணனை முனிதல்.

அஃதாவது, பரத்தையிற் பிரிந்த தலைவன் அனுப்பிய பாணனைத் தலைவி கோபித்தல். பாணன், இசைப்பாட்டுப் பாடும் புலவன்.

### பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிய விருத்தம்.

விதிக்கும் படைக்குந் தொழில்காட்டும்
வேலோன் வயின தேயன்வெரிந்
மேலோன் மருகன் குன்றையிடை
யிடைதீ மடங்க லடங்கலுந்தாய்க்
கொதிக்கு முழக்கிற் கணைமணிப்பூங்
குழைக்கா திளைக்கா துறந்துயரி
கொடுமை கொளுவ வெழுசுரத்தைக்
கூட்டி யிசைக்கும் பாணாவோ
மதிக்குந் திந்தண் குரறுத்தம்
வளர்கைக் கிளைகண் ணுழையழகு
வழங்கு மினிவி ளரிதார
மானு மெமரை வருத்தாமற்
றுதிக்கு மடவா டவர்க்கிறைதிண்
டுறுபூ தாமஞ் சுரத்தையிணைத்
துதைதந் துகம்வெந் தருமுலையைத்
தோய்வார்க் கூட்டி யிசைப்பாயே. (91)

இதுவுமது.

நேரிசைவெண்பா.

பாட்டுக் குறுங்குன்றைப் பண்ணவனன் றூட்டினுன்புன்
பாட்டுக் குறும்பறிவோம் பாணனே—கேட்டெமருள்
வாடவதி யாகுலமாழ் வாரா தலிறொழித்தி
கோட வதியா குலம். (92)

---

(91) துயரி-யாழ்நரம்பு. வெந்-முதுகு. தோய்வார்-தோய்கின்ற பரத்தையரை. கூட்டி-சேர்த்துவைத்து. இப்பாட்டில் குரல் முதல் விளரி வரையுள்ள ஏழு சுரங்களின் பெயர்களும் அடுக்கிவந்த நயங் கண்டுகொள்க. (92) பாட்டுக்கு-துன்பத்துக்கு. உறும் - வந்துதவிசெய்யும். அதியாகுலம்- மிகுந்தவருத்தம். கோடவதி-வீணை. ஆகுலம்-ஓசையை.

## வெறிவிலக்கல்.

அஃதாவது, தலைவியின் காமநோய் தணிக்க ஆடுவெட்டிப் பொங்கலிடுந் தாயரை நோக்கிப் பாங்கி தடுத்து அந்நோய் தணிக்கும் வழியைக்கூறல்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

குலைமொய்காய்த் தெங்கயல்சூழ் தடக்குருகு நீர்நிழலிற்
குலவித் தோன்று
மலைகொள்வான் மீனவிரா சியைக்கொத்தச் சுறவெழும்பி
யாகா யந்தாய்க்
கொலைசெய்நீள் யானையெனக் கற்பதருக் கிளைமுறிக்குங்
குன்றை நேர்ந்தி
ரிலைநெய்வார் தருகோடு யசியில்வெள் ளையைக்கிழிப்பீ
ரிரும்பொய் பீரே. (93)

இதுவுமது.

இருக்கோல மிட்டுமறி யாதமயின் மலைச்செவ்வே
ளென்றுந் தீராத்
திருக்கோல மொருக்காற்கண் டயர்ந்துள்ளே னறுகால்பூஞ்
செழுந்தேன் மாந்தி
மருக்கோலம் புயங்கிடக்கும் வகைகிடக்குந் தவயிழைக்கு
மாண்பி லேன்கட்
குருக்கோல மகளிரம்மை யிம்மையும்மை யியற்றியதென்
கூறி டீரே. (94)

## அடகு.

அஃதாவது, கீரை விற்கும் பெண்ணொருத்தியைக்கண்டு மயங்கிய தலைவன் கூறல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கூர்ந்தவள மயின்மலைநீண் மறுகுதொறும் அடகைக்
கூவிநொடை செய்விர்முலை சிறுகீரை யெதிர்ந்தோந்
தேர்ந்தபெரு மாயையின்வல் லாரையறி யேமித்
தெள்ளுபயஞ் சூழ்காவற் சிறைபுலகி னுமைப்போ

---

(93) அசியில்-வாளாயுதத்தால். வெள்ளையை-ஆட்டை. (94) குருக்கோல்-வாசனைவளைந்த. குரு-நிறம். கோலம்-அழகு. மகளிர்-பெண்களே. அம்மை-தாயே. இம்மை-இந்தஆடு. உம்மை-உங்களை. இயற்றியதென்-செய்ததென்னை. (95) நொடை-விலை. சிறுகீரை - சிறுத்திராத உங்களை. உமைப்போல் வல்லாரை யறியேமெனக் கூட்டுக.

வீர்ந்தகணை மலர்க்குப்பை மெனிசெறி வித்திர்
இறந்தநிக்தை வேளைவச மியற்றியவற் கொண்டே
யார்ந்தகம லாசனையன் னீர்நிறத்திற் குப்பொன்
ஞங்காணிப் பங்கேனு மார்சொல்வ ரொப்பே. (95)

## தலைவன் கலவிநலங் கண்டு தலைவி கூறல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஒப்புயர்வெப் புவனத்துங் கிடையாத குன்றைவரை
யுரவோன் யாண்டுஞ்
செப்புமிசை கொழுந்தோடிப் படர்மேம நாட்டைமுறை
செய்யும் வேந்தே
அப்புமுகில் யாப்பவிழ நாணகல வளைசிதற
ஆடை சோரத்
துப்புவெளுப் புறவிழிகள் சேப்பநீ செய்கலவித்
தொழில்நன் றாமே. (96)

## தென்றலால்வருந் துன்பத்தைத் தலைவி பாங்கிமார்களுக்குச் சொல்லுதல்.

நேரிசை வெண்பா.

ஆமேய்க்குங் கோன்மருக ஞர்குன்றைத் தோழியிரென்
ஞமேய்க்கும் வெம்பொருளிவ் வண்டத்தே—யீமேற்கும்
நீரஞ் சுமந்தா னிலந்தொலைக்கு மூழிவளி
நீரஞ்சு மந்தாநி லும். (97)

---

(95) அவற்கொண்டேசெறிவித்தீரெனக் கூட்டுக. நிறத்திற்கு-(உங்கள்) நிறத்திற்கு. இப்பாட்டில் சிறுகீரை, வல்லாரை, குப்பைமேனி, தைவேளை, பொன்னுங்காணி என்னும் பச்சிலைப் பெயர்கள் அடுக்கிவந்த நயங் கண்டுகொள்க. (96) முகில்-மேகம்போன்ற கூந்தல். யாப்பு-கட்டு. துப்பு-பவளம்போன்ற இதழ். (97) இப்பாட்டில் தென்றலானது யுகாந்த காலத்துக் காற்றுனல் இவ்வண்டத்து, இதை யொக்கும் பொருள் யாதாகுமெனக் கூட்டிப் பொருள்கொள்க.

## நாணிக் கண் புதைத்தல்.

அஃதாவது, தனியிடத்துத் தலைவனைக்கண்டு வெட்கமுற்றுக் கையினாலே கண்ணைப் பொத்திய தலைவியைத் தலைவன் வினவுதல்.

கட்டளைக்கலித்துறை.

திருவாதி யீயு மிருகாற் குளம்புக நேரெமக்குத்
திருவா திரைப்புனி தாமிர்த மாமெனச் செப்புமொழி
யுருவாதிர் நல்ல சலமறைத் தீர்குன்றை யூரணையீர்
வெருவாதி ரென்று மறைத்தீர்கொ லத்தத்து மீன்களையே. (98)

## தலைவியைத் தலைவன் மணந்து இல்லறவாழ்வெய்தப் பாங்கி வாழ்த்துக்கூறல்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மீகாமன் போலவுடற் கலமோட்டு விக்குமயில்
வெற்பன் பொற்பின்
மாகாமன் றுதைமன மகிழுமொரு திருமருகன்
வள்ளி காந்தன்
போகாமன் னிசைநேம நாட்டிறைவ வேட்டிவளைப்
புணர்ந்து வாழ்தி
சாகாமன் மதனுமொருக் காலும்வருந் தாவிரதி
தானும் போன்றே. (99)

## மங்கல வாழ்த்து.

நிலமண்டில ஆசிரியப்பா.

ஏனற் பசும்புனக் கூனற் கவின்குறற்
கிள்ளைமுற் போகிற் கொள்ளைகொள் ளாது
கொடிச்சிறு மருங்குற் கொடிச்சிய ரிதணிற்
காந்தளங் கையிற் பாந்தளஞ் செம்மணிக்
குணில்விசைத் தெறியூப் பணின்மிகக் கூவுங்

(98) திருவாதி-துன்பமில்லாமை. இருகாற்குளம்-இரண்டு கால்களைப் பக்கத்திற் கொண்டகுளம். அஃதாவது - அல்குல். நேர் - உடன்பட்டு நிற்கின்ற. நல்லசலம்-நல்ல அசலம், அஃதாவது, மலைபோன்ற தனம். அத்தத்து-அந்தத்தாவுகின்ற கையினிடத்து. மீன்-மீன்போன்ற கண். (99) காமன்-மன்மதன். மருகன் - மருமகன். நேமநாடு - குன்றக்குடி மலையுடைய நாடு. (100) குணில்-கவண்கல். எறியூ என்பது இளத்தென்பதோடு முடிந்தது. பணின்-இசைபோல,

கோகிலஞ் சிறிதுமொப் பாகில மென்றுக்
கொக்கடைக் கலமாப் புக்கடைக் கலப்ப
வாயோ வாக்கிளத் தாயைத் தொலியுந்
துணங்கற லியாண்டு மணங்குற லோடு
வெள்ளென்று வெளிற வொள்ளென்று சமழ்ப்ப
நேர்விட வொன்றிலாக் கார்விட முருக்கொளீஇத்
திரிந்தன விறவுளர் டரிந்தன ரின்றி
நெடும்புட் கரத்திற் கொடும்புலி காட்டினும்
நிணங்கழி யவாய்க்கொடு கணங்கழி முன்னர்த்
தோன்றமீன் டுறுவன நான்ற தாலைய
திருத்தியுட் செறித்துப் பொருத்திவார் விசித்த
சிறுமணிக் கோவை யுறுமணி கறங்குங்
கழுத்தின வணங்கன் குழுத்துழை காப்ப
நீள்வலை சிமிழ்த்துக் கோள்வினை வேளாத்
தொண்டகந் துவைக்கக் கண்டகங் கலங்கி
யேனஞ் சல்லியம் நாணங் குடாவடி
சசஞ்சீ காம்வரை யசஞ்சா ரங்க
மெதிரிடத் தொளிப்பவின் வெதிரிடத் தெழியா
வெளிச்செல லூக்கிய வளிப்பகை முழக்குந்
தண்டந் தேர்புவே தண்டம் போல்வன
பூட்சிக் குஞ்சர மீட்சிப் பேறில
மாட்டிய வமைத்த சாட்டியப் பயம்பிற்
சீயஞ் சித்திர காயம் பூட்கையும்
வீழ்ந்துபே துழப்பச் சூழ்ந்துகை கொட்டி
யிடிக்குஞ் சும்மையும் பிடிக்கும் வேட்கையிற்
சாரிகை சகோரங் காரிகைக் குறும்பூழ்
சிரவங் கம்புள்க ளரவம் புறவ

---

ஆயோ என்பது கிளிகளையோட்டுஞ் சொல். அணங்கு-வருத்தம். என்றூ-சூரியன். புட்கரத்தில்-ஆகாயத்தில். வாய்க்கொடு-வாயாற் கௌவிக்கொண்டு. தாலை-நாக்கு. வேளா-வேட்டு. குடாவடி-கரடி. சசம்-முசல். சீகாம்-கவரிமான். வெதிரிட-செவிபட. வேதண்டம்-கயிலைமலை. பூட்சி-உடல். மாட்டிய-மாட்ட. சாட்டியம்-வஞ்சகம். பயம்பு-படுகுழி.

வொலிப்பிற் கனைக்குங் கலிப்புந் தீராக்
கங்குலின் கானன மங்கு விரைப்பு
மருவியீர்த் திழியு மருவி யோசையு
மிறுவுடைந் தொழுகும் நறவி னரவமுங்
காகதுண் டப்புன் னாகஞ் சம்பகந்
திலகஞ் சந்திர திலகம் பாடலங்
குரவங் கேசர மரவங் கோங்கந்
துன்னுந் துடவையிற் பன்னுஞ் சிகாவள
மகண்டமும் நிரைத்த சிகண்டம் விரித்துக்
கண்ணுள்செய் யெங்கனு மெண்ணு ளடங்காத்
தொழுதிவெந் துழனியுங் கொழுதிவண் டிமிர்ந்து
பிரசமூற் றெடுக்குஞ் சாரமிந் தீவரந்
தவளைதேங் குடிக்குங் குவளையொடு கெழுமலின்
விமலஞ் செறிந்தவீர்ங் கமலந் தெரியா
வருங்கடிப் புதுப்போ தொருங்கு துதையப்
பொதியத் தாரணி பதியவைத் தன்ன
பான்மை தெரிக்கு மேன்மை சூழ்கழை
நல்வலங் குயிற்றும் பல்வல மெங்குங்
காண்ட மாரள குரண்ட சாரச
வுலம்பலும் வேறு சிலம்பலும் யாண்டுங்
கருவண் ணூறுசெய் திருவண் ணாமலைத்
தீதி னம்பெறு ஆதீ னத்திற்
சைவ சிகாமணி தெய்வ சிகாமணி
முன்னோன் வழிவரும் பன்னோன் பாற்றிய
எண்ணிலர்ப் பெரியோர் நண்ணிவீற் றிருந்த
திருமடத் தெங்கணும் பெருமடங் கழித்துக்
கற்றுங் கேட்டு முற்று முணர்ச்சியால்
உறவெலா முவர்த்துத் துறவுமேற் கொண்டு
மெல்லாடை விடுத்துக் கல்லாடை யுடுத்து
நெஞ்சடை யாது செஞ்சடை வளர்த்து

---

அருவி-தினைத்தாள். துடவை-பூஞ்சோலை. கண்ணுள்-நடனம். பல்வலம்-தடாகம். கல்லாடை-காவிவேஷ்டி.

நீறுங் கண்டியும் வீறுபெறப் புனைந்து
கவலுந் தொழிலொரீஇச் சிவலிங் கார்ச்சனை
வாசனை மலரால் நேசமோ டாற்றி
உய்யுங் கருத்தொடு செய்யும் பூசையிற
றண்டா தடிக்குங் கண்டா நாதமும்
பழுதாப் பகரா வெழுதாக் கிளவி
வெந்தழல் வேள்வி யந்தணர் நாவி
னாரவா ரப்புக லார வாரமு
மாவலர் நெடுநிலங் காவல ரிளஞ்சிறார்
அடுமரங் கொல்வேற் கொடுமர மொள்வாட்
சமரம் பயிலுழித் தமரமு மெட்டியர்
காவணம் நிழற்று மாவண மறுகிற்
பண்டமெண் ணற்றன கொண்டனர் பகருங்
களனுமுற் றெத்தகை வளனுங் குழுமக்
குரம்பு தடுத்துநீர் நிரம்பும் பண்ணையிற்
றெழுதுசே றாக்கி யுழுதுசொல் வித்திப்
பசும்பயிர் காணலும் விசும்பயிர்த் தஞ்சு
வாற்றுக்கா லாட்டியர் நாற்றைப் பறித்து
நடுங்காற் செருக்கி னிடுந்தீங் குரவையும்
பொற்கதிர் காட்டிய நெற்கதிர் முற்றும்
பதத்திற் களைந்துபல் விதத்திற் பெரும்போர்
தோய்ந்தந் தரந்தொட வேய்ந்து பகட்டிற்
கவைக்கான் மாழ்கத் துவைக்காப் பலாலங்
கழித்தசெஞ் சாலி பழித்த பதடியைத்
தூற்றி யொழுகையி னேற்றிக் கொடுபோங்
கோடணைப் பெருக்கும் வீடணை வாரை
முற்கலந் திருத்தியம் பொற்கலந் திருத்திக்
கருமைகண் டறியா வருமையொண் பாத்தும்
விருப்புநேர் விக்கும் பருப்பும் நேயமுந்
துவையும்நீ டாண மவையுங் கீரமும்

வாரம்-அன்பாக. எட்டியர்-வணிகர். குரம்பு-வரப்பு, விசும்பு-மேகம், வைக்கா-வைத்து. பதடி-சாவி. ஒழுகை-பண்டி,

வொலிப்பிற் கனைக்குங் கலிப்புந் தீராக்
கங்குலின் கானன மங்கு லிமைப்பு
மருவியீர்த் திழியு மருவி யோசையு
மிறுலுடைந் தொழுகும் நறுவி னரவமுங்
காசதுண் டப்புன் னாகஞ் சம்பகந்
திலகஞ் சந்திர திலகம் பாடலங்
குரவங் கேசர மரவங் கோங்கந்
துன்னுந் துடவையிற் பன்னுஞ் சிகாவள
மகண்டமும் நிரைத்த சிகண்டம் விரித்துக்
கண்ணுள்செய் யெங்கனு மெண்ணறு ளடங்காத்
தொழுதிவெந் துழனியுங் கொழுதிவண் டிமிர்ந்து
பிரசமூற் றெடுக்குஞ் சாசமிந் தீவரந்
தவளைதேங் குடிக்குங் குவளையொடு கெழுமலின்
விமலஞ் செறிந்தவீர்ங் கமலந் தெரியா
வருங்கடிப் புதுப்போ தொருங்கு துதையப்
பொதியத் தாரணி பதியவைத் தன்ன
பான்மை தெரிக்கு மென்மை சூழ்நனை
நல்வலங் குயிற்றும் பல்வல மெங்குங்
கரண்ட மராள குரண்ட சாரச
வலைப்பலும் வேறு சிலம்பலும் யாண்டுங்
கருவண் ணாதுசெய் திருவண் ணாமலைத்
தீதி னம்பெரு ஆதி னத்திற்
சைவ சிகாமணி தெய்வ சிகாமணி
முன்னோன் வழிவரும் பன்னோன் பாற்றிய
எண்ணிலர்ப் பெரியோர் நண்ணிவீற் றிருந்த
திருமடத் தெங்கணும் பெருமடங் கழித்துக்
கற்றுங் கேட்டு முற்று முணர்ச்சியால்
உறவெலா முவர்த்துத் துறவுமேற் கொண்டு
மெல்லாடை விடுத்துக் கல்லாடை யுடுத்து
நெஞ்சடை யாது செஞ்சடை வளர்த்து

---

அருவி-திணைத்தாள். துடவை-பூஞ்சோலை. கண்ணுள்-நடனம். பல்வலம்-தடாகம். கல்லாடை-காவிவேஷ்டி.

நீறுங் கண்டியும் வீறுபெறப் புனைந்து
கவலுந் தொழிலொரீஇச் சிவலிங் கார்ச்சனை
வாசனை மலரால் நேசமோ டாற்றி
உய்யுங் கருத்தொடு செய்யும் பூசையிற்
றண்டா தடிக்குங் கண்டா நாதமும்
பழுதாப் பகரா வெழுதாக் கிளவி
வெந்தழல் வேள்வி யந்தணர் நாவி
லாரவா ரப்புக லார வாரமு
மாவலர் நெடுநிலங் காவல ரிளஞ்சிறார்
அடுமரங் கொல்வேற் கொடுமர மொள்வாட்
சமரம் பயிலுழித் தமரமு மெட்டியர்
காவணம் நிழற்றுறு மாவண மறுகிற்
பண்டமெண் ணற்றன கொண்டனர் பகருங்
களனுமுற் றெத்தகை வளனுங் குழுமக்
குரம்பு தடுத்துநீர் நிரம்பும் பண்ணையிற்
றொழுதுசே றுக்கி யுழுதுசொல் வித்திப்
பசும்பயிர் காணலும் விசும்பயிர்த் தஞ்ச
வாற்றுக்கா லாட்டியர் நாற்றைப் பறித்து
நடுங்காற் செருக்கி னிடுந்தீங் குரவையும்
பொற்கதிர் காட்டிய நெற்கதிர் முற்றும்
பதத்திற் களைந்துபல் விதத்திற் பெரும்போர்
தோய்ந்தந் தரந்தொட வேய்ந்து பகட்டிற்
கவைக்கான் மாழ்கத் துவைக்காப் பலாலங்
கழித்தசெஞ் சாலி பழித்த பதடியைத்
தூற்றி யொழுகையி னேற்றிக் கொடுபோங்
கோடணைப் பெருக்கும் வீடணை வாரை
முற்கலந் திருத்தியம் பொற்கலந் திருத்திக்
கருமைகண் டறியா வருமையொண் பாத்தும்
விருப்புநேர் விக்கும் பருப்பும் நேயமுந்
துவையும்நீ டாண மவையுங் கீரமும்

---

வாரம்-அன்பாக. எட்டியர்-வணிகர். குரம்பு-வரப்பு. விசும்பு-மேகம், வைக்கா-வைத்து. பதடி-சாவி. ஒழுகை-பண்டி.

பெருகும்வெண் பெருகும் பருகுந் தேறலுங்
கொழும்பான் மல்கிய செழும்பா யசமும்
வாழை வருக்கைதே மாழையின் கனியுங்
கண்டமும் நாளு கண்டசிற் றுண்டியுந்
திருத்தியுண் டாமினென் றருத்தியு மீண்டும்
முன்பின் பாரா தன்பின் வட்டிப்ப
மாற்றலர்க் கிடைந்த வாற்ற(லர)லெறவிற்
போது மிடேன்மினென் றோது மோதையு
மொன்றி யென்றும் பொன்ற லின்றி
யுவாக்கட லடக்கு மவாக்கொடு கூவி
யேற்றது கீழாக் தோற்றுவித் தோங்கி
மேலுயர் குன்றை மால்வரை மோட்டிற்
சம்புமூ லந்தரும் பம்புமீ ராறு
கண்ணலர்ந் தொளிர்செவ் வண்ணவான் கரும்பு
தாளத் தொங்கலுஞ் சாளச் சின்னமுங்
கண்டிகைப் பிக்குந் தண்டிகை யூர்தியு
மாழப் புனற்றரை வாழப் பெறீஇப்புறப்
புல்விநங் கோமள வல்லி தழுவியும்
பண்ணழிக் குங்குயி னண்ணிளங் கரிணி
துய்ச்சு மிசைந்த மெய்ச்சுவைக் கன்னல்
வானவர் மருளுந் தானவர்க் கரசை
யத்திமா வைத்தெறும் நித்திய வேழந்
தயித்தியர்க் கழிந்த பயித்திய வண்டர்
குற்றுயிர்க் கிடக்கையிற் பற்றற வுயங்கிச்
சாதலும் பிழைப்ப தாதலு மல்லலுஞ்

---

பெருகு-மோர். மாழை-மாமரம். கண்டம்-வெல்லம். வட்டிப்ப-உணவு படைக்க. அறவின்-ஒலித்தலைப் போல. கூவி-அழைத்து. ஏற்று-எதிர்த்து. அது-அக்கடல். கீழா-கீழ்ப்படுதலாக, கிழக்குப்பக்கமாக. மோட்டில்-உச்சியில். சம்புமூலம்-சம்புவாகிய மூலப்பொருள். கோமளவல்லி-அழகிய வள்ளி நாயகி, பெண்யானையாகிய தெய்வயானை. துய்ச்சும்-உண்ணும். அத்திமா-கடலிற்றோன்றிய மாவாகிய சூரன்.

சுதையோ மருள்விட மதையோ வருந்தினம்
மருந்துண் ணுமையே பொருந்தும் நம்பிற்
றிசாமுகங் கவற்றும் நிசாசரர் வலிய
ரென்னுத் தம்மு னின்னுப் படரும்
வெருணனி துரப்ப வருளமிழ் தொழுக்கிய
கனற்கட் பிறந்து புனற்கட் கிடந்து
கார்த்திகை வளர்த்த சீர்த்திய கழைமெய்த்
தண்மையும் போதத் திண்மையுந் தவாது
பாகும் பொதுளியுள் ளாகும் வயிர
மற்பழு மின்றிப் பொற்ப வாளுமை
துன்னியெவ் வுயிர்க்குஞ் சுகந்தரு மதனை
முன்னிப் பழிச்சுநர் மன்னிவாழ் வாரே. (100)

---

வெருள்-அச்சம். கழை-கரும்பு. அதனை-அக்கரும்பை.

மு. ரா. அருணாசலக்கவிராயரேழுதிய குறிப்புரையுடன்
முற்றிற்று.





# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 2 | 7 | புசழ்குன்றைக் | புகழ்க்குன்றைக் |
| 8 | 13 | வறவுங் | லறவுங் |
| 23 | 16 | யுங்கவொ | யுங்வொ |
| 24 | 16 | தொழில்வரில் | தொழில்வரிற் |
| 27 | 26 | ாகில | நகில் |
| ,, | 28 | வந்து | தந்து |
| 40 | 16 | தோழி கூறுதல் | தோழி அன்னப்பறவையைத் தூதுபோகக் கூறுதல். |
| 46 | 3 | தனியிடத்துங் | |

ஸ்ரீமத் மஹாமஹோபாத்தியாயர்

பண்டித

உ. வே. சாமிநாதையரவர்கள்

# சாத்துகவி

---

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சீர்மலிந்த தென்னரியக் குடிவாழும் பெருமை
திகழ்புலவர் பலர்கூடிப் பாடியுத வென்னப்
பேர்மலிந்த வத்தலம்வாழ் பெருமாளே ரிளமான்
பிறங்குமார் புடைச்சீனி வாசநெடு மாலின்
ஏர்மலிந்த திருநாள்வா கனக்கவிக ளெழுதா
பிணிக்கவரித் தனமாலா வநிபுத்தூ ருடையான்
தார்மலிந்த புயத்தண்ணு மலைப்பெரியோ னளித்த
தமிழ்க்குருசில் இராமநா தப்பெயர்மே தகையே.

ஸ்ரீ:

ஸ்ரீ ராமஜெயம்.

# முகவுரை

---

சீருஞ் சிறப்பும் வாய்ந்த புண்ணிய பூமியாகிய பாரதகண்டத்தில் எந்நாட்டினும் சிறந்த தென்னாட்டிலே இனிது நஞ்செய் புஞ்செய்களுடன் யாவர்க்கும் வரையாது வேண்டிய கொடுக்கும் பாண்டிமண்டலத்தின் கீழ்த்திசையிலுள்ள செட்டிநாட்டின் வடகரையில் வடதிருவேங்கட முடைய ஸ்ரீநிவாசப் பெருமான் சதாசாந்நித்யமுள்ள தெய்வ நிலயமாய் விளங்கும் அரியக்குடி என்னும் திவ்யக்ஷேத்திரத்தில் ஸ்ரீமான் அ. சூ. ராம. கா. ஸ்ரீனிவாசன் செட்டியார் அவர்களுக்கு முறைப்படி சித்தித்த தேவஸ்தான அதிகார விசாரணைத் தொடக்கத்தில் வைகாசிவிசாக பிரமோத்ஸவத்திற்கு காளயுக்தி வருடம் சித்திரை மாதம் 28-ந் தேதியே துவஜாரோகணமாகிப் பூர்வாங்கம் பெறுவதை உணர்ந்து, அப்பெருமான் தொன்று தொட்டு எங்கள் பண்டைக்குல தெய்வமாதலாலும் அந்நகரம் எனது செட்டகமாதலாலும் ஆங்குச் சென்று, முதற்றிருநாள் முதலே அக்கண்கொள்ளாக் காட்சியைத் தரிசித்துக்களித்துக்கொண்டிருக்குங் காலத்தில், 12-ஆம் திருநாள் தெப்போற்சவத்துக்குத் திருக்குளத்தில் நீர் மிகவும் வற்றியிருந்த அந்நிலைக்கொண்டே ஒருவாறு காலை விழாக் கொண்டருளித் தெப்பத்தை விட்டிறங்கித் தீர்த்தமண்டபத்திற் றெழுந்தருளித் தீர்த்தப் பிரசாதம் அனுக்கிரகிக்கும் சமயத்தில் "இவ்வருடம் மழையின்மையால் திருக்குளத்தில் தண்ணீரின்றித் தெப்பம் நன்கு சுற்றுவதற்கு இயலா திருப்பது, பெருஜனங்கள்கூடித் தரிசிக்கக்கூடிய உத்ஸவ விமரிசைக்கு முற்றும் குறைவாயிருப்பதால், இன்று மேகங்கள் மழைபொழிய உமது கருணை மழை பொழிந்தருளல் வேண்டும் என்று பக்தஜனங்கள் குறையிரந்து வேண்டிநின்று தத்தம் இல்லங்கட்கு வழிக்கொண்டனர் அதை எம்பிரான் திருவுள்ளம் பற்றியதற்கு அறிகுறியாக மாலையிலேயே வானம் கறுத்துச்சிறிது மழையும் தூறிக்கொண்டிருந்தது.

அன்றிரவு 16 நாழிகைக்குமேல் ஆகாயத்தில் மேகங்கள் ஒருங்கு ஈண்டி வடதிசையில் ஒரு நாழிகை வழி தூரத்திலுள்ள பெருமாக் காட்டில் பெருமழை பொழிந்து அரியக்குடிக் கண்வாய் என்ற நீர்நிலை

நிறைந்து மடைவழியாகத் திருக்குளத்தில் நான்கு நாழிகை நேரத்தில் தண்ணீர் நிரம்ப, ஆங்கு அமிழ்ந்து கிடந்த தெப்பம் பக்தஜனங்களின் உள்ளக்கிளர்ச்சியேபோல் மேலுயர்ந்து, மிதந்து விளங்கிற்று. இவ்வைபவத்தைக்கண்ட அனைவரும் ஸ்ரீநிவாசப் பெருமாளை மனமொழி மெய்களால் நினைந்து நினைந்து உருகியும் தோத்திரங்களாற் பாடியும் ஆனந்தத்தால் ஆடியும் சந்தோஷவெள்ளத்தில் திளைத்தனர்.

அப்பால் நம்பெருமாள் மண்டபத்திலிருந்து தெப்பத்தில்வீற்றிருந்தருளித் திருக்குளத்தில் மூன்று பிரதட்சணமும் மிக்க கோலாகலத்துடன் நிறைவேற்றுவித்துக்கொண்டருளினன். இதனை உடனிருந்து கண்டுகளித்த யான் ஆராமை பற்றி "தண்ணிய பொழில் சூழ்" என்ற பாவினை உடனேபாடி எம்பெருமானுக்குப் புனைந்தேன். அதனைக்கேட்டுக் களித்து வியந்த தெடுமைச் சங்கீதசாகித்ய சாமர்த்தியத் தமிழ் வித்வான் ஸ்ரீமத்இராமஸ்வாமி அய்யங்கார் அவர்களும் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணப் பிரசங்க வியாபகரான சமஸ்கிருத வித்வான் வைதப்பங்கார் அவர்களும், இவ்வாறே உத்ஸவ ஆரம்பமுதல் முற்றும் வரையில் ஒவ்வொரு நாள் விசேடத்தையும் உள்ளவாறு பாடவேண்டுமென்று பெரிதும் வற்புறுத்தினர், இதனை அனுசரித்து வேறு பலரும் மிக்க விருப்பத்தோடு கேட்டுக்கொண்டனர். அன்னோர்கள் வாய்மொழித் துணையிருப்பினும், எம்பெருமான் திருவுள்ளப்பாங்கு எவ்வாறிருக்குமோ, முதலெடுத்துப் பாடுகிறது எவ்வாறு, என்று பல ஆலோசனைகளுடன் போய்க்கொண்டிருக்கையில், ஒரு நந்தவன விஷயமாய்த் தோட்டக்காரரிருவர் சம்பாஷணையில் 'பூக்கும் என்கிறேன் பாடு நிரம்ப இருக்கிறது,, என்ற வார்த்தைகள் கொச்சையாய்ச் செவிக்கு எட்டியன. அதையே எம்பெருமான் தந்தமுதலெனக்கொண்டு 'பூக்கும் புனல்சூழ்' என்ற கடவுள் வாழ்த்துச் செய்யுளைப் பாடிமுறையே உத்ஸவக்கவிகள் முற்றிலும் முற்றுவித்தேன்.

ஓங்கி உலகளந்த உத்தமன் திருத்தாளில் ஒன்றுக்கும் பற்றாத சிறியேன், எனக்கு அவ்வாண்டவன் அளித்த சிற்றறிவுக்கெட்டிய மட்டில் பாடிப்புனைந்தது இஃதாதலாலும், புகழினும்இகழினும் எனக்கோர்பற்றுமில்லை ஆதலாலும் இதனைப்படிக்கும் அறிஞர்கள் குறைகளை நிரப்பிக் கொள்ளுமாறு மிகவும் வேண்டுகின்றேன். தங்கள்லௌகிகப்

ஸ்ரீ:

ஸ்ரீ ராமஜெயம்.

அரியக்குடி

ஸ்ரீநிவாஸப் பெருமாள் திருவிழா

# வாகனக்கவி



கடவுள் வாழ்த்து

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

பார்ந்து புலைக்குங் கருமணியைப்
பெரியப் பெருமாள் கொண்டருளும்
வாக்கு மனக்குக் கெட்டாத
வளர்ந்த திருநாட் கவிபுனையத்
தேர்ந்தார் வெண்ணெய் காட்டுகெனச்
சிறந்த புவனந் தெரிதரவுங்
காக்குந் திருவா யொருதெய்வங்
காக்குங் கடமை யுடைத்தாமால். (1)

## முதல் திருநாள்-அன்னவாகனம்.

(பன்னிருசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்)

சீரா ரரியைத் திருநகரந்
தினமுஞ் செழித்துச் சிறந்தோங்கத்
திருவேங் கடமா மலைகடந்து
சேர்ந்த கருணைப் பெருங்கடலே
பாரார் புகழ்வை காசிவிழாப்
பத்தர் குழுமு முதற்றிருநாட்
பால்வெண் ணிறத்த மடவன்னம்
பற்றி யுகைக்குந் தகையென்னே

தாரார் கடந்தற் றிருத்தேகி
தளர்வென் னடையைச் சிறாக்கித்
தானே யுணருந் திவ்யருளமோ
தண்ணாங் கமலத் தவிசிலயன்
வாரார் புகழ்ச்சே வடியுறையாய்
மகிழ்ந்து கொடுக்கக் கொண்டருளு
மாண்போ அன்னம் முதன்மையென
வைத்த பொருளோ வுருங்குடியால். (2)

## இரண்டாந் திருநாள்-சிங்கவாகனம்.

(எழுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்)

அங்கமா றுணர்ந்த வேதியர் நிறைந்த
அரியைவாழ் வுடையசெங் கண்ணு
சிங்கவே றேறி யழகிய விரண்டாந்
திருவிழாக் கொண்டமை கண்டோர்
துங்கமார் குலத்தோ ரொருவரை யொருவர்
சூழ்ந்துதாங் குதல்மா பென்றே
சிங்கவா கனமுன் சிங்கமா யவன்
திருவடி சுமந்ததை யன்றே. (3)

## மூன்றாந் திருநாள்-அநுமான் வாகனம்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.)

* புவிசுமந்த பேராற்றற் குடையுடையா
ரென்றாலும் புலவர் பாடுங்
கவிசுமந்த வாழ்க்கையரே யென்றுமுளா
ரென்றுலகங் காணுதற்கோ

---

* புவிசுமந்த பேராற்றற்குடை என்பதில், பூமியைத் தாங்கிய ஆதிசேடனாகிய குடை என்பது தொனிப் பொருளாகும்.

அடர்ந்தபெருங் கானகத்தை யடைந்தபஞ்ச
பாண்டவர்க்கா யன்று தூது
நடந்தபிரானின்று வெண்ணெய்க் குடங்கவர்ந்து
தவழ்ந்ததென்ன ஞாயந்தானே. (15)

விண்ணாடி வந்திறைஞ்சு மரியையில்மா
யாவெட்டாம் விழவிற் காலைக்
கண்ணாடி யிற்றிருநிம் வெண்ணெயொடு
பலவுருவங் காட்டிப் போந்தா
பண்ணாடி யுளவறிந்த திருடர்செய
லிஃதேயா முன்னே யுள்ளக்
கண்ணாடி யிந்நகர்ச்சே வகன்பிடித்தெங்
களுக்கெல்லாம் காட்டி னானே. (16)

எத்திக்கும் புகழரியை நகரரசே
வெண்ணெய்கவர்ந் தின்று காலைப்
புத்திக்கெட் டாநாளென் றேமாற்றிப்
பிடிபட்டுப் போனாய் பானாட்
சத்திக்கு மூரடங்க மாவேறி
யோடுகின்ற சமையம் வீடு
சித்திக்குஞ் செயற்காவற் கூடத்தார்
கையில் மீண்டுஞ் சிக்கினாயே. (17)

ஒன்பதாந் திருநாள் - திருத்தேர்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.)

தாரதமி யம்பார்த்தா தரிப்பவர்கட்
கவ்வுதவி தானே சேரும்
பாரதங்கண் டருளியநாட் பாண்டவர்கள்
வேண்டவிறற் பார்த்த னேறு

---

உள்ளக்கண் ணாடி—மனக்கண்ணால் கண்டு. சேவகன் ஊர்காவலன், அரியக்குடித் திருக்கோயில் கண்ட சேவகஞ் செட்டியாரவர்கள். எட்டாநாள்— எட்டாந்திருவிழா, எட்டாத நாள். செயற்காவற் கூடத்தார் (வீடு சித்திக்குஞ்) செயற்கு ஆவலுள்ள கூடஸ்தர், சிறைச்சாலைக்குரியவர்

மோரதம்பூட் டியபரிக ளோட்டியநீ
பிராட்டியரோ டுளம்பூ ரிப்ப
மாரதமோட் டின ரமரா வதிநாட்டார்
காணரியை வாழு மாலே. (18)

## பத்தாம் திருநாள்-கோரதம்.

[அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்]

இருதிரண்டு மூன்றினிலுஞ் சிறந்துயர்வை
காசிவிழா வீரைந் தாநாள்
ஏருதிரண்டு பூட்டிவரும் வருணரதத்
தினிற்றேவ ரிறைஞ்சி யேத்திக்
கருதிரண்டு மாதருடன் பார்த்தசா
ரதிக்கோலங் கண்டா யென்னே
பொருதிரண்டு கரையுமலை யெறியுமது
நதியரியைப் புரியின் மாலே. (19)

## பதினொராந் திருநாள்-வெள்ளிரதம்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.)

கலைகொண்ட புகழாள ருறைகின்ற
அரியைபிலவாழ் கருணை மாலே
விலைகொண்ட வெள்ளிரதத் தன்னைமா
ரிருவருடன் விளங்கிப் போந்தாய்
அலைகொண்ட பாற்கடல்தான் கரைபுரண்டுங்
கெய்தியதோ வன்றேல மாறு
நிலைகொண்டவமுதகடம் பொங்கிவழிந்
தோடியதோ நிகழ்த்து வாயே. (20)

---

அமராவதி நாட்டார் பன்னிரண்டு ஊர்கள் கொண்ட அமராவதி நாட்டு ஜனங்கள் தேவர்.

வருணரதம்—அருச்சனனேறிய தேர் அக்கினி தேவனாற் கொடுக்கப்பட்டதாதலால், இக்கோரதம் வருணரதமென்று நயம்பட கூறப்பட்டது.

வருணரதம்—வருணனாற் கொடுக்கப்பட்ட தேர். மதுநதி—அரியைக்குப் பக்கத்தோடும் தேனாறு.

## பன்னிரண்டாந்திருநாள் தெப்பம்.

(எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.]

பயத்திலே பிறந்து வளர்ந்தபொற் கொடியும்
பஃறலைப் பாந்தளுச் சியின்மேற்
பயத்திலே சூழ்ந்து கிடந்தபூங் கொம்பும்
பங்கயச் செங்கையா லணைபப்
பயத்திலே கிடந்து வளர்ந்தநீ யவரைப்
பற்றுபு தெப்பம்வீற் றிருந்தாய்
பயத்திலே கிடக்கு மச்சமா முனக்கும்
பயமுண்டோ அரியை வாழ்பவனே. (21)

தண்ணிய பொழில்சூ ழரியைவாழ் முகுந்த
சாமிநீ திருவுள முகக்குந்
திண்ணிய தெப்ப மியங்கநீ ரின்றிச்
சிந்தைநொந் தயர்ந்திடும் போழ்திற
புண்ணிய முகில்கள் கணத்தினிற் குமுறிப்
பொழிந்துநீர் நிறைந்தது சுற்றப்
பண்ணிய பெருமை முன்மழை தடுத்த
பரிசினைப் பாற்றிய தன்றே.

## பதின்மூன்றாந் திருநாள்-விடாயாற்றி.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

வாளைபாய் தடம்புடைசூ ழரியைவா
ழெங்கள்குல வாழ்வே செம்பொற்
றாளைவா னுறநீட்டி யளந்ததிருத்
தாடாளா தசக்கி ரீவா
நாளைவா வின்றுபோ வென்றாய்க்கும்
விடாயாற்றல் ஞாயந் தானே
நீயையா இயரைத்தான் விடாயாற்றி
யென்றுன்னை நிகழ்த்து வாரே. (23)

---

முதலிலும் மூன்றிலும வரும பயம்—பால்., இரண்டிலும் நான்கிலும் வரும் பயம்—நீர். பயத்திலே—(நீரில்) கிடக்கும் மச்சத்துக்கு (மீனுக்கு) பயமுண்டோ என்க.

## பதினான்காந் திருநாள் அலர்மேல் மங்காபுரம் சேரல்.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

அலர்மேன் மங்கை யகலாது
அரியை நகரி லமர்ந்தோனே
அலர்மேன் மங்கை மணவாளா
அழகார் வடவேங் கடநாதா
அலர்மேன் மங்கை திருமார்பி
லணியா விருந்தாய் நெடுந்தூர
தலர்மேன் மங்கை புரஞ்சென்றாய்
காதற் கடற்கோ ரளவுண்டோ (24)

## பதினைந்தாந் திருநாள்-புன்னைக்கிளை சேவை.

(அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.)

விருத்திசெயுந் தனவணிக ருறையரியைக்
கோபால விமலா முன்ன
பொருத்திபுனைந் திடுமாடை யொன்றுமில
வாகிவளர்ந் தயரச் செய்தாய்
திருத்தியபூங் குழன்மடவார் பலர்களுக்குந்
தகிலொருங்கே திருடிச் சென்றாய்
கருத்தெதுவோ பொதுவர்குலத்
தினில் வளர்ந்தாய் நடுநிலைமை கண்டோ மின்றே. (25)

உரமேறிப் பயிரெல்லாம் விண்மேவுறி
வளரரியை யுடையாய் புன்னை
மரமேறிக் கலை கருட்டி யொளித்தாயீ
தெனத்தேடி வந்தோந் நேயர்
புரமேறி மீண்டாற்குக் கலைவிரித்துக்
காட்டிவெளிப் போந்தா யென்று
வரமேறி யொளிர்சாமி வீட்டுவா யிலிற்கண்டோம்
மகிழ்கொண் டோமே. (26)

---

* நீளையாதியர்—நீளாதேவி, ஸ்ரீதேவி, பூதேவி.

